# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் தங்குவசதி விவரங்கள்

### ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயரகள் | கட்டணம (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரணடு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவவொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய... அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடிலகள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, | |
| A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாதரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள்(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாட்களுக்கு முனபேயே அனுப்புதல் வேண்டும்.)



கடைந்த பாற்கடல்கிடந்து காலநேமியைக் கடிந்து
உடைந்த வாலிதன்தனக்கு உதவவந்து இராமனாய்
மிடைந்த ஏழ்மரங்களும் அடங்க வெய்து வேங்கடம்
அடைந்தமால பாதமே அடைந்து நாளும் உய்ம்மினோ.

[கூர்மாவதாரத்திலே கடையப்பட்ட திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளியும், காலநேமியென்னும் அசுரனை ஒழித்தருளியும், நடுங்கிக்கிடந்த வாலியின் தம்பியான சுக்ரீவனுக்கு உதவி செய்ய இராமபிரானாய் வந்து தோன்றி ஒன்றோடொன்றாகப் பிணைந்து கிடந்த ஏழு மரங்களையும், ஏழேழாகவுள்ள ஏழுகுல மலை முதலான மற்றவற்றையும் அம்பினாலே துளைபடுத்தித்திருவேங்கடமலையிலே எழுந்தருளியும்இருப்பவனான எம்பெருமானுடைய திருவடிகளை நாள்தோறும் அடைந்து உய்வு பெறுங்கள்.]

-திருச்சந்த விருத்தம் - 81

YAGADISH

    

# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"
**வணக்கம்.**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒருநாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆச்ரம வளா கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம் :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள் : பத்ராசலம் (ஆ.பி.) வாரணுஸி (உ.பி.)




*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

மலர் 29 | செப்டம்பர் - 1998 | இதழ் 4

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| அடியவர் வினைகெடுக்கும் நச்சுமாமருந்து | 8 |
| இலக்கியத்தில் திருவேங்கடம் | 12 |
| இராமாநுஜர் திருவேங்கட யாத்திரை | 16 |
| கலியன் கண்டநுபவித்த கலியுகக்கடவுள் | 20 |
| திருமலையில் ஆதிசேஷன் வைபவம் | 26 |
| திருவேங்கடமுடையானின் அருள்மிகு ஏற்றம் | 31 |
| திருவேங்கடமுடையானும் தொண்டைமான் சக்ரவர்த்தியும் | 34 |
| திருவேங்கட மலை | 38 |
| திருமலை வரலாறு | 42 |
| பிறப்பறுக்கும் பிரான் | 45 |



**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : திருமலையான் கல்யாணோத்ஸவம்.
பின் அட்டை : திருமலையான் ஆனந்தநிலைய திருக்காட்சி.

இவ் இதழ் பிரம்மோத்ஸவ சிறப்பிதழாக வெளிவருகின்றது.

சிறப்பாசிரியர் :
திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

❋ ❋ ❋

ஆசிரியர் :
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

❋ ❋ ❋

துணை ஆசிரியர் :
திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,

❋ ❋ ❋

அச்சிடுபவர் :
திரு. எம். லக்ஷ்மண் ராவ்
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

❋ ❋ ❋

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❋ ❋ ❋

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

## உங்களுடன்....

இந்திய மண்ணில் பிறந்த பல்வேறுச் சமயங்களுள் 'வைணவ சமயம்' ஓர் அதிமுக்கிய இடத்தைப் பிடித்து பாரெங்கும் பரவுகின்ற அளவுக்கு இன்றைக்கு உயர்ந்த உன்னத நிலையில் விளங்குகின்றது எனில் அதற்குக்காரணம் அச்சமயத்தைக் கட்டிக்காத்த ஆழ்வார்களும், ஆசாரியர்களுமே ஆவர். ஆழ்வார்களுள் நம்மாழ்வாரும், ஆசாரியர்களுள் இராமாநுஜரும் தலைவர்களாவர். இவர்கள் வைணவ சமயத்தையும், வைணவ சம்ப்பிரதாய நெறிமுறைகளையும் வளர்த்து வந்தமை குறிப்பிடத்தக்கன. ஏழ்பாடும் உய்ய அவர்கள் உரைத்தவைகளை எண்ணி மகிழத்தக்கன. இவ்விரு மகான்களும் இல்லையெனில் வைணவம் தன் பொலிவிழந்தே அமைந்திருக்கும்.

விஷ்ணுவை தலைமையாகக் கொண்ட இச்சமயம் அநாதி காலந்தொட்டே இருந்து வருகிறது. அதற்கு சாட்சியாக வேத, உபநிடத, இதிகாச, புராணங்கள் உள்ளன. அம்மகா விஷ்ணு பரமபதத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய முப்பிராட்டியுடன் வீற்றிருந்து அனைத்துப் பொருள்களையும் அதாவது அறிவுள் பொருள், அறிவில் பொருள்களை படைத்து, காத்து, பிரளய காலத்தில் அழித்தும் வருகிறான்.

எங்கும் நிறைந்து எதிலும் மறைந்து யாவற்றையும் தன்னகத்தே கொண்டு பரந்து விரிந்து விளங்குகிறான் எம்பெருமான் ஸ்ரீவைகுண்டநாதன். இப்பரமபத நாதன் வைகுண்டத்திலே நித்திய ஸூரிகளால் எழுப்பப்படுகின்ற ஆவ்..... ஆவ்..... எனும் தேவ கானத்திலே மூழ்கி செயலற்று கிடப்பதைக் காட்டிலும் பூலோகத்திற்கு வந்து பூலோக வாசிகளான தன்னுடைய குழந்தைகளைக் கண்டு ஆனந்தித்து அவர்களை திருத்திப் பணி கொள்வதிலே பூரண திருப்தி அடைகிறான். அப்பொழுதுதான் அவனுடைய கல்யாண குணங்களும் வெளிப்படுகின்றன.

கடல் சூழ்ந்த உலகினில் காரிருளைப் போக்கி கருணை மழைப் பொழிவதற்காக எம்பெருமான் பரமபதத்தை விட்டு பாற்கடலில் கண் வளர்த்தருளினான். மேலும் அடியார்களின் துக்க கூக்குரலுக்கு செவிசாய்த்து ஓடிவருவதற்காக பாம்பணைமேல் பள்ளி கொண்டான் அப்பரந்தாமன். அதோடு இராம, கிருஷ்ண அவதாரங்கள் எடுப்பதற்கு ஏற்ற ஆலோசனைக் கூடமாகவும் கொண்டு அங்கு கள்ள நித்திரை புரிந்தான் அப்பரமன்.

எம்பெருமான் மண்ணில் மலிந்திருந்த அதர்மங்களை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும், மயங்கிக்கிடந்த மக்களைத் தட்டி எழுப்புவதற்காகவும் இராம, கிருஷ்ண அவதாரங்களை எடுத்தான். அவ் அவதார காலத்தில் வாழ்ந்தவர்கள் அதிர்ஷ்ட சாலிகளே! எவ்வாறென்னில் அக்காலத்தவர் எம்பெருமானின் திவ்ய மங்கள ஸ்வரூபத்தைக் கண்டு ஆநந்தித்திருப்பர். அதோடு திருலீலைகளைப் பார்த்து பரவசப்பட்டிருப்பர். எனவேதான் நம்மாழ்வாரும் 43 திருநக்ஷத்திரங்களுக்கு முன்பு பிறக்காமல் போனோமே பிறந்திருந்தால் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டிருக்கலாமே என்று மன வேதனைப்பட்டதாகப் பெரியோர் கூறுவர்.

ஆக ஞானிகளாலே காண இயலாத பரமனை உண்டியே, உடையே, உறவே என்று ஓடித்திரியும் இக்கலிகால சாதாரண சம்சாரிகளால் எவ்வாறு காண இயலும்? ஆம். காண இயலாதுதான். யார் யாரை என்றால்? பரமபதத்திற்கு சென்று நாம் பரந்தா

மனை காண்பது கடினமே. திருப்பாற்கடலில் கண்துயில்பவனை காண்பதும் கடினமே. மற்றும் இராம, கிருஷ்ணர்களைக் காண்பது அதனினும் கடினமே! எப்படி எனில் அன்று நாம் பிறந்திலோம். பிறந்தபின்பு இன்று நாம் அவர்களை மறந்திலோம். எனவே இவ் அவதாரங்களின் திருமேனி சௌந்தர்ய அழகை 'கண்டு பற்றுகைக்கு சௌலப்யம்' என்னும்மாப்போலே நாம் இன்றைக்கு எளிமையாக கண்டு அநுபவிக்க வேண்டுமாயின் நூற்றெட்டு திவ்ய தேசங்களிலும் அர்ச்சா மூர்த்தியாக எழுந்தருளி கோயில் கொண்டுள்ள எம்பெருமான்களைச் சென்று அடைய வேண்டும்.

நூற்றெட்டு திவ்ய தேசங்களிலே கோயில், திருமலை, பெருமாள்கோயில் எனும் மூன்றும் சிறந்தவையாக கருதப்பட்டு வருகின்றன. இங்கு குடிகொண்டிருக்கும் எம்பெருமான்களும் ஸ்வயம் வ்யக்தமாக எழுந்தருளினவர்கள் என்று புராணங்கள் பேசுகின்றன. இம்மூன்றிலும் திருமலைக்கு ஏற்றம் அதிகம். பத்து ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட பெருமாள் இத்திருவேங்கடவன். இப்பெருமாள் ஆழ்வார்கள் முக்திக்கு காரணமானவன். எனவேதான் திருமங்கையாழ்வாரும், 'பிறப்பறுக்கும் பிரான்' என்றும், நம்மாழ்வார் 'ஓயும் மூப்புப் பிறப்பு இறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து ஆயன்' என்றும், குலசேகரர் 'செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமால்' என்றும், திருமழிசைப்பிரான் 'வேங்கடமே மெய் வினை நோய் தீர்ப்பதுவும்' என்றும் குறிப்பிட்டுள்ளமை உற்று நோக்கத்தக்கது. ஆழ்வார்களின் பிறப்பை மட்டுமின்றி ஆசார்யர்களின் பிறப்பையும் அறுத்தவன் திருவேங்கடத்தவன். அவனே இன்று கோடான கோடி மக்களின் துயர்களை களைந்து வருகிறான்.

நாளும் விழாக்கோலம் பூண்டொழுகும் திருமலையானுக்கு ஒவ்வொரு ஆண்டும் அவன் அவதரித்த புரட்டாசி மாதம் திருவோண நக்ஷத்ரம் கூடிய துவாதசியில் 'பிரம்மோத்ஸவம்' மிகவும் சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது. திருவேங்கடமுடையானுடைய வேண்டுகோளின்படி பிரம்மாவால் நடத்தப்பட்டு வந்த இப்பிரம்மோத்ஸவம் இன்றும் பிரம்மாவால் நடத்தப்படுவதாகவே எண்ணி ஒவ்வொரு வாகனங்களுக்கு முன்னும் 'பிரம்ம ரதம்' ஒன்று செல்வதை நாம் காணலாம். பத்து நாளும் கொண்டாடப்படும் இவ்விழாவில் திருமலையே வைகுண்டமாக காட்சியளிப்பதோடு கோடான கோடி மக்களின் கண்ணிற்கு சமய விருந்தாக அமைந்து அவர்களை ஆனந்த வெள்ளத்தில் மூழ்க வைக்கிறது.

வழக்கம் போல் இந்த ஆண்டும் 22-9-98 முதல் 1-10-98 வரை பத்துநாட்கள் 'பிரம்மோத்ஸவ' பேரின்பப் பெருவிழா திருமலையில் கோலாகலமாக நடைபெறவுள்ளது. இவ்வாண்டும் திருமலையில் யாத்திரிகர்கள் யாவரும் எவ்வித பிரச்சனையுமின்றி இப்பெருவிழாவை கண்டு களித்திட தகுந்த ஏற்பாடுகளை தி.தி. தேவஸ்தானம் மேற்கொண்டுள்ளது. இத்திருவோணத் திருவிழாவிற்கு சேதனர்களாகிய நாம் சென்று 'உலகுய்ய மால் நின்ற உயர் வேங்கடத்தே அலர்மகளை முன்னிட்டு அவன்தன் மலரடியே வன் சரணுய்ச்' சேர்ந்து வீடுபேறு அடைவோமாக.

காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓணவிழவில் ஒலியதிர - பேணி
வருவேங்கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங்கடமதனைச் சென்று.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் கோயில் ஆழ்வார் திருமஞ்சனம்

திருமலை திருவேங்கடவன் திருக்கோயிலில் 14-7-98 செவ்வாயன்று "கோயில் ஆழ்வார் திருமஞ்சனம்" நடந்தது. வருடத்தில் நான்குமுறை இந்நிகழ்ச்சி நடக்கும். ஒவ்வொரு ஆண்டும் உகாதி, (தெலுங்கு வருடப்பிறப்பு) ஆனிவார ஆஸ்தானம், பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசிக்கு முன்னதாக வரும் செவ்வாய்க்கிழமைகளில் இந்நிகழ்ச்சியை நடத்துவர். திருநாமம், சந்தனம், பச்சைக்கற்பூரம் போன்றவற்றை கூட்டி செய்யப்பட்ட களிம்பினால் ஆலயத்தை சுத்தப்படுத்தி சுத்தி செய்வார்கள். இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தான உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர். இதை முன்னிட்டு எம்பெருமானின் சர்வ தரிசனம் செவ்வாய் அன்று மதியம் துவங்கியது. தினந்தோறும் நடக்கின்ற ஆர்ஜித சேவைகள், கல்யாணோத்ஸவம் தடை செய்யப்பட்டது.

## திருமலையில் ஆனிவார ஆஸ்தானம்

திருமலையில் எம்பெருமான் சந்நிதியில் 16-7-98 அன்று ஆனிவார ஆஸ்தானம் நிகழ்ச்சி சிறப்பாக நடந்தது. ஒவ்வொரு வருடமும் உத்தராயண புண்ய கால ஆரம்பத்தில் இந்நிகழ்ச்சி நடைபெறுகின்றது. இதை முன்னிட்டு உத்சவமூர்த்தியாகிய மலையப்ப சுவாமியையும், ஸ்ரீதேவி பூதேவியையும் தங்க வாசலில் வைத்து ஆஸ்தானம் அமைத்து சென்ற வருட வரவு செலவு கணக்குகளைப் படித்தனர். இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தானத்தின் உயர் அலுவலர்கள் பலர் கலந்து கொண்டனர்.

ஆனிவார ஆஸ்தானத்தை முன்னிட்டு மாலையில் பூப்பல்லக்கில் சுவாமி திருவீதி வலம் வந்தார். தி.தி. தேவஸ்தான தோட்ட மேற்பார்வை உயர் அலுவலர் திரு. நாதமுனி ரெட்டி தலைமையில் சுமார் 2000 கிலோ பூக்களால் தயார் செய்யப்பட்ட பல்லக்கில் உற்சவ மூர்த்தியை வைத்து நான்கு மாட வீதியில் திருவீதி உலா வந்தனர். இந்நிகழ்ச்சியில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் கலந்துகொண்டு சுவாமியை தரிசனம் செய்து கொண்டனர்.

இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், கோயில் இணைச்செயலாட்சித் தலைவர் திரு. ஸ்ரீநிவாசுலு, தலைமைப் பொறியாளர் திரு. முனிரெட்டி, பாதுகாப்பு அலுவலர் திரு. ஜநார்த்தன நாயுடு, திரு. ஏ.வி. எஸ்.ஓ. இரவிசங்கர், பேஷ்கார் திரு. ரங்கநாதாசாரி கலந்து கொண்டனர்.

## திருமலையில்...

ஆந்திர மாநில முதல் அமைச்சர் திரு. நாரா சந்திரபாபுநாயுடு அவர்கள் 19-7-98 ஞாயிறு அன்று மதியம் 1-30 மணி அளவில் குடும்பத்தாருடன் திருவேங்கடவனை தரிசித்தார்.

கோயிலில் அவருக்கு கோயில் முறைப்படி அலுவலர்கள் வரவேற்பு அளித்தனர். முதலவருக்கு வரவேற்பு அளித்தவர்களில் பொறுப்பாண்மைக்குழுத்



தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திர ராஜு, செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக், இணைச் செயலாட்சித் தலைவர் திரு. பாலசுப்ரமணியம் (திருமலை), திரு. ராமகிருஷ்ணு, தலைமைக் காவல் அலுவலர் திரு. விஜய குமார், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் திரு. மகதேவ நாயுடு, திரு. ராதாகிருஷ்ண ராஜு, கோயில் துணைச்செயலாட்சி தலைவர் திரு. எம். ஸ்ரீநிவாசுலு, ஆலய பேஷ்கார் திரு. ரங்கநாதாசாரி, எ.வி. எஸ்.ஓ. திரு. ரவிசங்கர் முதலியோர் அடங்குவர். முதலமைச்சர் எம்பெருமானை தரிப்பதற்காக கோயில் முன்வாயிலில் செல்லாமல் வைகுண்டம் க்யூ வழியாக சென்றார். கோயிலில் 15 நிமிடம் வரை இருந்தார். ஆலய அர்ச்சகர்கள் திருமலையான் வைபவத்தை தெரிவித்தார்கள். தரிசனம் முடிந்ததும் முதல்வருக்கு பட்டு மேலாடையை ஆலய அலுவலர்கள் வெகுமதியாக அளித்தனர். பிறகு வகுளாதேவி நிலையத்தையும், ஸ்ரீநரசிம்ம சுவாமியையும் தரிசித்து உண்டியில் காணிக்கையை சமர்ப்பித்தார். பிறகு ரங்கநாயக மண்டபம் அடைந்து அங்கு வேத வித்தகர்களின் ஆசீர்வாதம் பெற்றார். பிறகு பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திர ராஜு கோயில் பிரசாதம் அளித்தார். முதல்வருடன் அவர் மனைவி திருமதி. புவனேஸ்வரிதேவி, மகன் லோகேஸ், தம்பி ராமமூர்த்தி நாயுடு, மாநில அமைச்சர் பொஜ்ஜல கோபால கிருஷ்ணரெட்டி. சட்டமன்ற உறுப்பினர்கள் திரு. மோகன், திரு. ஸ்ரீநாதரெட்டி, திரு. சுராஜ், திரு. சாகர்ரெட்டி, திரு. காந்தி முதலியோர்கள் இருந்தனர். தரிசனம் முடிந்த பிறகு "வேங்கட விஜயம்" விருந்தினர் மாளிகை திறப்பு விழாவிற்கு புறப்பட்டு சென்றார். அதற்கு முன்பேயே பத்மாவதி விருந்தினர் மாளிகையில் முதல்வருக்கு பொறுப்பாண்மைக்குழுத் தலைவர், செயலாட்சித்தலைவர், இணைச்செயலாட்சித்தலைவருடன் வரவேற்பு துணை செயலாட்சித் தலைவர் திரு. கோபால், ஏ.எஸ்.டி. திரு. ராமய்யா வரவேற்பு அளித்தனர். ★

*திருமலை வாருங்கள்!* *திருவருள் பெறுங்கள்!!*

## திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயில்

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்

### நிகழ்ச்சி நிரல்

| நாள் | கிழமை | பகல் உத்ஸவங்கள் | இரவு உத்ஸவங்கள் |
|---|---|---|---|
| 22-09-98 | செவ்வாய் | - | சேனாதிபதி உத்ஸவம் அங்குரார்ப்பணம் |
| 23-09-98 | புதன் | வைரகவச ஆபரணத்துடன் தங்க திருச்சி உத்ஸவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷவாகனம் |
| 24-09-98 | வியாழன் | சிறிய சேஷவாகனம் | அம்ச வாகனம் |
| 25-09-98 | வெள்ளி | சிம்ம வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 26-09-98 | சனி | கல்ப விருக்ஷ வாகனம் | சர்வபூபால வாகனம் |
| 27-09-98 | ஞாயிறு | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட ஸேவை |
| 28-09-98 | திங்கள் | அனுமன் வாகனம் மாலை: வஸந்தோத்ஸவம் | யானை வாகனம் |
| 29-09-98 | செவ்வாய் | சூர்யபிரபை வாகனம் | சந்திர பிரபை வாகனம் |
| 30-09-98 | புதன் | ரதோத்ஸவம் (திருத்தேர்) | குதிரை வாகனம் |
| 1-10-98 | வியாழன் | பல்லக்கு உத்ஸவம், தீர்த்தவாரி அவப்ருதோத்ஸவம், சக்ரஸ்நானம், | திருச்சியில்(மகாதோரண) துவஜாவரோஹணம். |

இந்தப் பத்துநாட்கள் திருமலை கொலு மண்டபத்தில் பிரபல பண்டிதர்களால் அறநிலைச் சொற்பொழிவுகளும், புராணக்கதைகளும் நடத்தப்படும்.
அதோடு இசை நிகழ்ச்சிகளும், ஹரி கதைகளும், பஜனைகளும் நடைபெறும்.

# அடியவர் வினைகெடுக்கும் நச்சுமாமருந்து

திரு. ஜே. சடகோபாசாரியார் - நான்குநேரி.

## முன்னுரை :

இம்மண்ணுலகில் அனைவரும் ஒவ்வொரு நாளும் "எங்கு மருந்து கிடைக்கும்" என்று தேடி அலைந்து மருந்தைக் கண்டுபிடித்து, அந்த மருந்து உண்மையா? போலியா? என்பதை மருத்துவரிடம் காண்பித்து, உண்மையை நன்கு அறிந்து உண்பதை நாம் காண்கிறோம். இந்த மருந்து உடலில் ஏற்படும் நோயை மட்டும் போக்கும்.

இதற்கு மேல் மனநல மருத்துவர் என்று சிலர் இருக்கிறார்கள். ஆனால், நம் உடலில் இருக்கும் ஜீவாத்மா பரமாத்வாவை அடைவதற்குத் தடையாக இருக்கும் நோய் யாது? இந்த நோயை நீக்கும் மருத்துவர் யார்? அவர் எங்கு இருக்கிறார்? என்று சிந்திப்பவர் மிக மிகச்சிலரே. அந்நமயம், ப்ராணமயம் என்ற இரண்டு நிலைகளைக் கடந்து, மனோமயத்தை ஒழுங்காகச் சரியான நிலையில் அமைத்துக் கொள்பவரே, விஞ்ஞான மயத்துக்கு வந்து, ஆநந்தமயனான அலர்மேல் மங்கையுறை மார்பனின் பரிபூர்ணமான பேரருளைப் பெறமுடியும் என்ற அரும் பெருங் கருத்தை அறிவிப்பதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

## பொருள் :

மருந்து, மாமருந்து, நச்சில் கொடிய நஞ்சாகிய பிறவியென்னும் பிறவிப்பிணி. இதைப் போக்கும் சிறந்த மருந்து மாமருந்து. இதற்குமேல் அடியவர் வினை கெடுக்கும் நச்சு மாமருந்து நம் வேங்கடவன். இதை உணர்த்துவதே இந்தக் கட்டுரை.

இந்த நுட்பமான கருத்தைப் பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதியில்,

"அடைந்த அருவினை யோடல்லல்
நோய் பாவம்
மிடைந்தவை மீண்டொழிய
வேண்டில் நூடங்கிடையை
முன் இலங்கை வைத்தான்
முரண் அழிய முன்னொருநாள்
தன் வில் அங்கை வைத்தான்
சரண்"

என்றும்,
பூதத்தாழ்வார்,





"பழி பாவம் கையகற்றிப்
பல்காறும் நின்னை,
வழிவாழ்வார் வாழ்வராம்மாதோ-
வழுவின்றி
நாரணன் தன் நாமங்கள்
நன்குணர்ந்து நன்கேத்தும்
காரணங்கள் தாமுடையார்தாம்"

என்றும்,

"அது நன்றிது தீதென்று
ஐயப்படாதே,
மதுநின்ற தண் துழாய் மார்பன்-
பொதுநின்ற
பொன்னங்கழலே தொழுமின்,
முழுவினைகள்
முழுவினைகள் முன்னம்கழலும்
முடிந்து"

என்றும்,

இம்மண்ணுலகில் நாலாயிரத்தெழுநூண்டுகள் வாழ்ந்த திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில்,

"அச்சம் நோயோடு அல்லல்
பல்பிறப்பவாய மூப்பிவை,
வைத்த சிந்தை வைத்தவாக்கை
மாற்றிவானில் ஏத்துவான்
அச்சுதன் அநந்தகீர்த்தி
ஆதி அந்தமில்லவன்
நச்சுநாகணைக் கிடந்த நாதன்
வேதகீதனே"

என்றும்,

ஆதிகுருவாய் அவதரித்த ஸ்வாமி நம்மாழ்வார்,

"சார்ந்த இருவல்வினைகளும்
சரித்து மாயப்பற்றறுத்து,
தீர்ந்து தன்பால் மனம் வைக்கத்
திருத்தி வீடு திருத்துவான்"

என்றும்,

"அச்சுதன் அமலன் என்கோ,
அடியவர்வினைகெடுக்கும்,
நச்சுமாமருந்தும் என்கோ நலங்கடல்
அமுதம் என்கோ,
அச்சுவைக்கட்டி என்கோ
அறுசுவை அடிசில் என்கோ
நெய்ச்சுவைத் தேறலென்கோ?
கனியென்கோ பாலென்கேனோ?"

என்றும் பாடியுள்ளார்.

இந்தப் பாடலில் அமைந்த "நச்சுமாமருந்து" என்ற சொல்லுக்கு, ஸ்வாமி நம்மாழ்வாரே "அடியவர் வினைகெடுக்கும்" என்ற அடைமொழியையும் அழகாக அமைத்துள்ளார். இந்தச் சொல்லையே இந்தக் கட்டுரைக்குப் பெயராக அமைத்துள்ளேன். இந்தப் பாடலில் அமைந்த சொல்சுவை பொருட்சுவைகளையும் நுகர்வோம்.

அச்சுதன் என்ற சொல்லுக்கு முன்பாட்டில், "ஆதியஞ்சோதி, ஆதியம்புருடன், ஆதுமில்காலத்தெந்தை" என்று மூன்று அடைமொழிகளை அமைத்துள்ளார்.

இதையே திருமழிசைப்பிரானும்,

"ஆதிஆதிஆதி நீ ஓரண்டமாதி
ஆதலால்
சோதியாத சோதி நீ அது
உண்மையில் விளங்கினாய்"

என்று அறிவித்துள்ளார்.
இதையே காரிமாறப்பிரான் திருவாசிரியத்தில்,

"பெரும்பாழ்க்காலத்து, இரும்
பொருட்கெல்லாம்
அரும்பெறல் தனிவித்து"

என்று அறிவித்து, திருவாய்மொழிக்கடைசியில்,

"முதல் தனிவித்தேயோ முழு
முழுமூவுலகாதிக்கெல்லாம,
முதல்தனி உன்னை உன்னை"

என்று பாடியுள்ளார்.

அமலன்=குற்றமே இல்லாதவன். இந்தச் சொல்லையே, "கேடில் விழுப்புகழ்க் கேசவனை" என்று புரியும்படி பாடியுள்ளார். இனி 'மருந்து' என்றால் நாக்குக்குக் கசப்பாக இருக்குமா? என்பது, அதற்கும் விடை அளிக்கிறார் மகிழ்மாறன். நலங்கடல் அமுதம், அச்சுவைக்கட்டி, அறுசுவை அடிசில். நெய்ச்சுவைத் தேறல், கனி, பால் என்று இதற்குமேல் எந்தக் கவியால் விளக்கம் கூற முடியும்?

"அமுதென்றும் தேனென்றும்
ஆழியானென்றும்,
அமுதன்று கொண்டுகந்தா-
னென்றும்-அமுதன்ன
சொல் மாலை யேத்தித்
தொழுதேன்"

என்று அருளிச்செய்துள்ளார். இதனால் பாடப்படுபவர், பாடுபவர், பாடல், என்று மூன்றுமே அமுத மயம் என்பதை உணர்கிறோம்.

எம்பெருமான், அமுதினுமாற்ற இனியன் ஆராவமுதன், அருளிச்செயல் தொண்டர்க்கு அமுது. பக்தாம்ருதம்.

ஆழ்வார் கனியைக்கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை ஏத்துபவர் ஸ்வாமி எம்பெருமானார், ஸ்ரீபாஷ்ய ஆரம்பத்தில்,

"பாராசர்ய வசஸ்ஸுதாமுபநிஷத்
துக்தாப்தி மத்யோத்த்ருதாம்,
ஸம்ஸாராக்நி விதீபந வ்யபகத
ப்ராணாத்ம ஸம்ஜீவநீம்"

என்று அருளிச்செயதுள்ளார்.

இதன் ஆழிபொருளையும் அறிவிக்கிறேன்.

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்குப் பாயிரமாக அமைந்த ஸ்லோகம் இது,

"வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம்
சக்தே: பௌத்ரம் அகல்மஷம்
பராசராத் மஜம் வந்தேசுதாதம்
தபோநிதிம்"

என்று, ஸ்வாமி எம்பெருமானார், இந்த இடத்தில், "வ்யாஸார் யோக்தவசஸ்ஸுதாம்" என்று எழுதியிருக்கலாம். எதற்காக, "பராசர்ய" என்று எழுதியுள்ளார்? என்பதையும் ஆராய்வோம். பராசரர் யார்? என்பதற்கு விளக்கத்தைப் பரமாசார்யரான ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்ந ஆரம்பத்தில் அருளிச்செய்துள்ளார்.

"தத்வேநய: சிதசிதீச்வர
தத்ஸ்வபாவி போகாபவர்க்க
தது பாயகதி: உதார:
ஸந்தர் சயந் நிரமிமீத
புராண ரத்நம், தஸ்மைநமோ
முநிவராய பராசராய"

என்று,

இதனால் ஸ்ரீவிஷ்ணு புராணம் அருளிச் செய்த ஸ்ரீபராசரரின் புதல்வர் வ்யாஸர். அவர் செய்த நல்ல செயலைப் பின்பற்றி, வ்யாஸர் நூற்றெட்டு என்ற எண்ணிக்கையில் திகழும் உபநிஷத்கள் என்ற திருப்பாற்கடலைக் கடைந்து, ஸ்ரீபாஷ்யம் அருளிச்செய்தார். அலைகடலைக் கடைந்து அமரர்க்கு அமுது அருளினான் ஆராவமுதன். அதைப் போல ஸ்வாமி எம்பெருமானாரும் வையத்தில் வாழும் அடியவர்களுக்கு நச்சுமாமருந்தான அமிர்தத்தை அளித்து வாழ்விக்கிறார். திருவாய்மொழி அமிர்தம் என்பதை விளக்கமாகக் கூறும் திருவாய்மொழிப் பாடல்:-

"மிடைந்த சொல் தொடை ஆயிரத்து
இப்பத்து,
உடைந்த நோய்களை ஒடுவிக்குமே"
(திருவாய்மொழி 1-7-11)

என்பது,

இதனால், அடியவர்கட்கு ஆராவமுதமாகத் திகழும் எம்பெருமானைப் போலத் திகழ்வதுபோலத் திருவாய்மொழியும் "அடியவர் வினைகெடுக்கும் நச்சுமா மருந்தாகத்" "திகழ்கிறது. பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணிசாரேன்" என்றார் நம்மாழ்வார்.

ஆழ்வார் திருவடிகளே சரணம் என்பதை அறிவிக்கும் ஒரு பாடல்.

"மறைப்பாற்கடலைத் திருநாவின்
மந்தரத்தால் கடைந்து,
துறைப் பால்படுத்தித்
தமிழாயிரத்தின் சுவையமிர்தம்
கறைப்பாம்பணைப்பள்ளியான்
அன்பரீட்டம் களித்தருநத
நிறைப்பான் கழலன்றிச் சன்ம
விடாய்க்கு நிழல் இல்லையே"

என்பது,

இதனால் அருளிச்செயலே, "அடியவர் வினைகெடுக்கும் நச்சுமாமருந்து" என்பதை உணர்கிறோம்.

பெரியாழ்வாரும்,

"எருத்துக்கொடி உடையானும்
பிரமனும் இந்திரனும், மற்றும்
ஒருத்தரும் இப்பிறவி என்னும்
நோய்க்கு
மருந்து அறிவாருமில்லை
மருத்துவனாய் நின்ற
மாமணி வண்ணா"

என்று பாடி,

"சென்னியோங்கு தண்திருவேங்கடம்
உடையாய், பறவை யேறு
பரம்புருடா,
நீ என்னைக்கைக்கொண்டபின்,
பிறவியென்னும் கடலும் வற்றிப்
பெரும்பதமாகின்றதால்"

என்று பாடித் திருவேங்கடவனே அடியவர் வினைகெடுக்கும் நச்சுமாமருந்தென்று அறிவித்துள்ளார்.

திருமங்கைமன்னனும், பெரிய திருமொழி ஆரம்பத்தில் நாராயணா என்னும் திருநாமமே "அடியவர்வினைகெடுக்கும் நச்சுமாமருந்து" என்பதை, "அடியார்படுதுயராயின எல்லாம் நிலந்தரம் செய்யும்" என்று உலகுக்கு உணர்த்தியுள்ளார். இது மட்டுமா?

"விண்ணோர்தொழும் வேங்கட
மாமலைமேய அண்ணா,
அடியேன் இடரைக் களையாயே"

என்றும், "நெடியாய் அடியேன் இடர்நீக்கே", "ஆராவமுதே அடி

யேனிடர் நீக்கே" என்று திரு வேங்கடவனிடம் முறையிட்டு, "உகந்தவர் தம்மை மண்மிசைப் பிறவியே கெடுப்பான்" என்று பாடி, திருவேங்கடவன் அடிய வர்வினை கெடுக்கும் நச்சுமாம ருந்து, என்று அறிவித்துள்ளார்.

மதுரகவியும், கண்ணிநுண் சிறுத்தாம்பில் திருவேங்கட நாதனின் திருவடிநிலை என்ற ஸ்ரீசடகோபனே அடி யவர் வினைகெடுக்கும் நச்சுமா மருந்து என்ற தத்துவத்தைக்

"கண்டு கொண்டென்னைக்
காரி மாறப்பிரான்,
பண்டை வல்வினை
பாற்றியருளினான்"

என்று அறிவித்துள்ளார். திருவரங்கத்தமுதனாரும், இரா மாநுஜ நூற்றந்தாதியில்,

"என்பெய்வினையைக் கிட்டிக்
கிழங்கொடு
தன்அருளென்னு ஒள்வாள்உருவி
வெட்டிக்களைந்த இராமாநுஜன்" —

என்றும்,

இராமாநுஜன் என்தன் மெய் வினை நோய்களைந்து, நன் ஞான மளித்தனன் என்றும்,

"பூமன்னுமாது பொருந்திய
மார்பன்,
புகழ்மலிந்த பாமன்னுமாறன்,
அடிபணிந்துய்ந்த எம்பெருமானாரே,
அடியவர்வினைகெடுக்கும்
நச்சுமா மருந்தென்று"

என்று தெரிவித்துள்ளார்.

திருவேங்கடவன் அடியவர் வினைகெடுக்கும் நச்சுமாமருந் தென்று கூறிமுடிக்காமல், நம் மாழ்வாரும், எம்பெருமானாரும் அடியவர்வினை கெடுக்கும் நச் சுமாமருந்தென்று அறிவிப்பதன் காரணம் யாதெனில்,

"ஸித்திர்பவதிவாநேதி ஸம்சயோ°
ச்யுதஸேவி நாம்
ந ஸம் சயோ°ஸ்தி தத்பக்த
பரிசர்யாரதாத்மநாம்"

என்றொரு ஸ்லோகம் இருக்கி றது.

இதன்பொருள் யாதெனில், அடியவர்களை நழுவவிடாத வன் அச்சுதன், அவனும் பக வதபசார பாகவதாப சார, அஸஹ்யாபசாரங்களைக் கணக் கிட்டு, சீற்றம் கொண்டு அருள் புரியாமல் இருப்பான்.

இந்தக் கருத்தை ஸ்ரீபராசர பட்டர், ஸ்ரீகுணரத்ந கோசத் தில், "பிதேவ த்வத் ப்ரேயாந்". என்ற ஸ்லோகத்தால் அறிவித் துள்ளார்.

இதன் கருத்தை ஸ்ரீராமாய ணத்தில், சீதாப்பிராட்டி, அநு மானிடம்,

"பாபாநாம் வா சுபாநாம் வா
வதார் ஹாணும் ப்லவங்கம்
கார்யம் கருணமார்யேண
நகச்சித் நாபராத்யதி"

என்ற ஸ்லோகத்தால் அறிவித் துள்ளாள். இதன் பொருள்: குற்றம் செய்யாதவர் ஒருவரும் கிடையாதென்பதே.

## முடிவுரை :

மன்னுபுகழ் சேர் மணவாள மாமுனிவன் யதிராஜ விம்சதி யில், "காலத்ரயே°பி கரணத் ரய...." என்ற ஸ்லோகத்தில் "க்ஷேமஸ்ஸ ஏஹியதீந்த்ர பவத் ச்ரிதாநாம்" என்று அறிவித்துள் ளார்.

ஆசாரியர்களின் பரிபூர்ண மான திருவருள், திருவேங்கட வனின் திருவுள்ளத்தில் அருள் புரியவேணும் என்ற எண்ணம் ஏற்பட்டால், நமக்கும் திருவேங் கடத்தெந்தை வினைகெடுக்கும் நச்சுமாமருந்தாக விளங்குவான்.

ஸ்ரீவெங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய
மங்களம்.

*

**கேட்டவர்க்கு கேட்டபடி அருள்தரும் அலர்மேல்மங்கைதாயார் சமேத திருவேங்கடம் உடையான் திருக்கோயில், அரியக்குடி.**

## பிரார்த்தனையும் பலனும்

1. தொடர்ச்சியாக சனிக்கிழமை தோறும் அங்கப்பிரதட்சணம் செய்து அர்ச்சனை செய்தால் சகல காரியங்களும் கை கூடும்.
2. பிரதி புதன்கிழமை (பதினொரு கிழமை) தோறும் தாயா ருக்கு அர்ச்சனை செய்தால், தடை நீங்கி திருமணம் நடைபெறும்.
3. வியாழக்கிழமை தோறும் (7 கிழமைகள்) சர்க்கரத்தாழ்வா ருக்கு அர்ச்சனை செய்தால் பயம் நீங்கும்.
4. பிரதி வெள்ளிக்கிழமைதோறும் (பனிரெண்டு வாரம்) தாயார், பெருமாளுக்கு அர்ச்சனை செய்தால், உத்யோகம் கிடைக்கும்.
5. தொடர்ச்சியாக ஆறு புதன்கிழமை சகஸ்ரநாமம் அர்ச்சனை செய்தால் தீராத நோய் தீரும்.

# இலக்கியத்தில் திருவேங்கடம்

'சதுயன்'

தொன்மை :

திருமால் திருவருள் புரியும் திருத்தலங்கள் பல. அவற்றுள்ளும் அல்லும் பகலும் அனவரதமும் திருவிழாக்கோலம் பூண்டு வாழ்விக்கும் திருத்தலம் திருவேங்கடம்.

இது திருவேங்கடம், திருமலை, திருப்பதி என்னும் பெயர்களால் வழங்கப்படுகிறது.

திருவேங்கடம் என்னும் திருப்பெயர் தொன்மையானது; அழகியது; தெய்வத் தன்மை நிரம்பியது.

தொல்காப்பியப்பாயிரத்தில்:

தொல்காப்பியம் தமிழிலக்கண நூல்; ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. இந்த இலக்கண நூலிலும் திருவேங்கடம் குறிக்கப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்துக்குச் சிறப்புப் பாயிரம் ஒன்று உண்டு. இதைப் பாடியவர் பனம்பாரனார்.

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து"

என்று இச் சிறப்புப் பாயிரம் தொடங்குகிறது. இவ்வடிகளால் ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே வேங்கடம் என்னும் சொல் வழக்கில் உள்ளமையை உணரலாம்.

பெயர்க் காரணம்

புரந்தரன் என்றொரு வேதியன். இவன் மகன் பெயர



மாதவன். மாதவன் வேதியன் மகனாயினும் ஒழுக்கம் கெட்டவன்; இழிகுலத்துப் பெண்ணை மணந்து கொண்டவன்; திருடு வதையே தொழிலாகக் கொண்டவன்.

இவன் நடத்தையைக் கண்டு இவன் மனைவி இவனைத் தன்னிடமிருந்தே துரத்தி விட்டாள்.

இதனால் மாதவன் மனம் நொந்தான். தன் நிலைக்கு வருந்தினான். தன் பாபங்களைப் போக்கிக் கொள்ளத் திருமலை நோக்கி நடந்தான்.

மலை ஏறிச் செல்லச் செல்ல இவன் பாபங்கள் கடகட வென்று வேகத் தொடங்கின. அன்று முதல் வேங்கடம் என்னும் பெயர திருமலைக்கு வழங்கலாயிற்று. கடம் என்றால் பாபம். வேம் என்றால் வேகும். மலையேறிச் செல்வோரின் பாபங்கள் வெந்து போவதால், திருமலைக்கு வேங்கடம் என்னும் பெயர் வழங்கலாயிற்று.

தெய்வ சம்பந்தம் :

இத்திருமலை தெய்வ சம்பந்தமுடையது. இம்மலையை வைகுந்தத்திலிருந்து கருடாழ்வார் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்தார் என்பர் நூலோர்.

இவ்வுலகமானது முன்பொரு கால் குமாரக்கடவுளை நோக்கி வழிபாடு செய்ததாம். அவ்வழிபாட்டின் பயனாகவே இம்மண்ணுலககுக்கு இம்மலை சித்திக்கப்பெற்றது என்பர் சிலர்.

வேறொரு வகையாகவும் இம்மலை வாய்க்கப்பெற்றது குறித்துக் கூறுவது உண்டு. அதாவது, நிலங்கடந்த நெடுமுடி அண்ணலாகிய திருமாலை நோக்கி இவ்வுலகம் தவம் செய்ததாகவும், அதனால் சித்திக்கப் பெற்றதே இம்மலை என்றும் கூறுவர்.

சிலம்பு போற்றும் வேங்கடம் :

திருவேங்கடவப் பெருமானின் திருக்கோலத்தைச் சிலப்பதிகாரம் ஓவியமாக எழுதிக் காட்டுகிறது.

"நிறைந்த அருவிகளை உடையது திருவேங்கடமலை. இம்மலையின் உச்சி மீது ஒளிக்கதிர்களை வீசும் சூரியனும், சந்



திரனும் இரு மருங்கும் காணப்படும்.

நல்ல நீல நிறத்தினை யுடைய மேகமானது மின்னலாகிய புதிய ஆடையை உடுத்திக் கொண்டு, இந்திரவில்லாகிய அணிகலனைப் பூண்டு நிற்பதைப்போல;

சங்கு சக்கரத்தினை அழகிய கைகளில் ஏந்தி, ஒளி வீசும் ஆரங்களை மார்பில் தரித்து, பொன்னாலாகிய பூப் பொறித்த ஆடையுடன் விளங்கித் தோன்றும் சிவந்த கண்களை உடைய திருமால் நின்ற கோலத்தில் காட்சி அளிக்கிறார்" என்று திருவேங்கடவனைச் சிலம்பு அழகோவியமாகச் சித்திரித்துக் காட்டுகிறது.

"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுங் கோடி உடுத்து விளங்குவில் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"

சிலம்பு-காடுகாண் காதை(41-51)

திருமாலடியாரைப்போன்று திருவேங்கடவன் நின்ற கோலத்தைப் பாக்களில் வரைந்து காட்டும் இளங்கோவடிகளின் வண்ண ஓவியம் இது!

இனிக் கம்ப சித்திரத்தைக் காண்போம்:

## கம்ப சித்திரத்தில் திருவேங்கடம் :

சீதையைத் தேடிக் கண்டு பிடிக்க வானர வீரர் சிலரைச் சுக்ரீவன் தென்திசைக்கு அனுப்பி வைக்கின்றான். வழியில் எதிர்ப்படும் திருவேங்கட மலையின் சிறப்பைச் சுக்ரீவன் அப்போது வீரர்களிடம் கூறுகின்றான்.

"வடமொழியும் தமிழ்மொழியும் மிகுதியாக வழங்கும் நிலங்களுக்கு இடையில் நின்று எல்லையைக் குறிப்பது திருவேங்கடமலை.

நான்கு வேதங்களிலும், மற்றைச் சாத்திரங்களிலும், இதிகாச புராணங்களிலும் சிறப்பாக எடுத்துக்கூறப்படும் முழுமுதற்கடவுளான திருமால் இம்மலையில் தான் எழுந்தருளியிருக்கிறார்.

இம்மலையில்தான் தர்மங்கள் அனைத்தும் நிறைந்திருக்கின்றன.

பூத உடம்பு அழிந்தாலும் புகழுடம்பு அழியாது நின்று உலகத்தாரால் கொண்டாடப்படுவதைப் போல, பிரளய காலத்திலும் தான் அழியாது நின்று உலகத்தார் பலராலும் நாளும் வணங்கப்படும் பெருமையை உடையது.

நல்வினை தீவினை சம்பந்தப்பட்ட பயன்கருதி ஒரு தொழிலையும் செய்யாமல், செல்வ வாழ்க்கையிலும் வறுமை வாழ்க்கையிலும் ஒரே மனநிலை உடையவர்களும், பிறப்புக்கு மூலகாரணம் இருவினைகளே என்று உணர்ந்தவர்களும், இருவினையின் தொடர்பை நீக்குதற்குரிய தத்துவ ஞானம் நிரம்பப் பெற்றவர்களுமாகிய ஞானியர் பலர் இம்மலையில் இருக்கின்றனர். திக்குநோக்கி நாம் வணங்குதற்குரியவர் இம்மலையில் வாழும் ஞானியர்.

மனத்தூய்மை உடைய மறையவர் நாள்தோறும் நீராடும் துறைகளையுடைய ஆறுகள் பல இம்மலையில் உள்ளன. வேதங்களையும், பழமையான நூல்களையும் அறிந்த முனிவர் பலர் உறைகின்ற ஆசிரமங்கள் பலவும் இங்கு உள. மேகங்களால் சூழப்படும் மணிவரைகளும் பல உள. தேவமாதர்கள் வந்து கின்னர வாத்தியங்களை இம்மலையில் இன்னிசையுடன் வாசிப்பர். இயற்கையாகவே ஒன்றோடொன்று பகைக்கும் குணமுடைய யானைக் கன்றுகளும் புலிக்குட்டிகளும் இந்த இசையில் மயங்கித் தம் முன் பகை நீங்கி ஒரே இடத்தில் ஒருசேர உறங்கும்.

இத்தகைய சிறப்பு மிக்க சிகரங்கள் பொருந்திய பெரிய இத் திருவேங்கடமலையை நெருங்கினாலே மிக்க கொடிய பாவங்கள் எல்லாம் உடனே ஒழியும். முத்திப் பேறும் கிட்டும்."

"வடசொற்கும் தென்சொற்கும்
வரம்பிற்றாய்
நான்மறையும் மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்கெல்லாம்
எல்லையதாய்
நல்லறத்துக் கீறாய் வேறு
புடைசுற்றும் துணையின்றிப்
புகழ் பொதிந்த
மெய்யே போல் பூத்து நின்ற
அடைசுற்றும் தண் சாரல்
ஓங்கிய வேங்
கடத்திற்சென் றடைதிர் மாதோ.

இருவினையும் இடைவிடா
வெவ்வினையும்
இயற்றாதே இமையோர் ஏத்தும்
திருவினையும் இருபதம்தேர்
சிறுமையையும்
முறையொப்பத் தெளிந்து
நோக்கிக்
கருவினைய திப்பிறவிக்
கென் றுணர்ந்தங்
கதுகளையும் கடையின் ஞானத்து
அருவினையின் பெரும்பகைஞர்
ஆண்டுளரீன்
டிருந்துமடி வணங்கற் பாலார்.

தோதவத்தித் தூய்மறையோர்
துறையாடு
நிறையாறும் சுருதித் தொன்னூல்
மாதவத்தோர் உறைவிடனும்
மழையுறங்கும்
மணித்தடனும் வான மாதர்
கீதமொத்த கின்னரங்கள்
இன்னரம்பு
வருடுதொறும் கிளக்கும் ஓதை
போதகத்தின் மழக்கன்றும்
புலிப்பறழும்
உறங்கிடனும் பொருந்திற்றம்மா.

கோடுறுமால் வரையதனைக்
குறுகுதிரேல்
உம்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதிர்!"

(26,27,28,29 நாடவிட்டபடலம்,
கிஷ்கிந்தா காண்டம்,
கம்பராமாயணம்.)

## புராணங்களும புகழ்ந்து பேசும் :

இனி, புராணப்பாடல்கள் சிலவற்றையும் நோக்குவோம்: திருமாலின் திவ்ய தேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும்; வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டினுள் ஒன்றும்; கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்ற மூன்று தலங்களுள் இடையதுமாகிய திருத்தலம் திருவேங்கடம்.

இத்திருத்தலம் புராணங்களாலும் புகழ்ந்து கூறப்படும் பெருமைக்குரியது. ஓரிரு பாடல்களைச் சுட்டுவோம்.

"அத்திரு மலைக்குச் சீரார்
வேங்கடா சலமென் னும்பேர்
வைத்தனர் அதுவே தென்னில்
வேம்என வழங்கெ ழுத்தே
கொத்துறு பவத்தைக் கூறும்
கடவெனக் கூறி ரண்டாம்
சுத்தவக் கரம்கொ ளுத்தப் படும்எனச்
சொல்வர் மேலோர்."

"வெங்கொடும் பவங்கள் எல்லாம்
வெந்திடச் செய்வ தால்நல்
மங்கலம் பொருந்தும் சீர்வேங்
கடமலை யான தென்ப"

அழிவில்லாத ஐஸ்வர்யங்களைத் தருவதால், இம்மலை திருவேங்கடம் எனப்படுகிறது என்று வராக புராணம் கூறுகிறது.

(வேம்-அழிவின்மை; கடம்-ஐஸ்வர்யம்)

பிற்காலத்தே தோன்றிய சிற்றிலக்கியங்கள் வேங்கடத்தை வானளாவப் புகழ்கின்றன.

பிற்காலச் சிற்றிலக்கியங்கள் புனைந்தவர்களுள் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரும் ஒருவர். இவர் திவ்யகவி என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். அழகிய மணவாளதாசர் என்னும் திருநாமமும் இவருக்கு உண்டு. திவ்ய கவி மறந்தும் புறந்தொழா மாண்புடையவர். இவர் இயற்றிய நூலே அஷ்டப் பிரபந்தம் எனப்படுகிறது. எட்டுப் பிரபந்தங்களுள் இரண்டு திருவேங்கடம் பற்றியவை. அவை திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி என்பன.

இவர் பாடல்கள் சொல் நோக்கும், பொருள் நோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும் நிரம்பியவை.

சான்றுக்கு இரண்டு பாடல்களைப்பார்ப்போம்:

"மூலமே என்றகரி முன்வந்து
இடர் தொலைத்து

வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஆலய தரிசன சுற்றுலா



ஒவ்வொரு நாளும் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இந்த 'ஆலய தரிசன சுற்றுலா' பேருந்து, காலை 7-00 மணி அளவில் புறப்பட்டு மதியம் 1-30 மணி அளவில் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும்.

### காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீவேணுகோபாலசுவாமி கோயில்-காருவேட்டுநகரம்.
2) ஸ்ரீவேதநாராயணசுவாமி கோயில்-நாகலாபுரம்.
3) ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்-நாராயணவனம்.
4) ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் -திருச்சானூர்.

### பேருந்து கட்டணம்

பெரியோர் : ரூ. 38/- (நபர் ஒருவர்க்கு)

சிறுர் : ரூ. 17/- (நபர் ஒருவர்க்கு)

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

**இந்தப் பேருந்தில் பயணிக்கும் பக்தர்களுக்கு அன்ன பிரஸாதம் ஒருமுறை வழங்கப்படும்.**

*நீலமே கம்போல நின்றுனைப்-*
*பாலாய*
*வேலைநடு வில்துயிலும் வித்தகனை*
*வேங்கடத்து*
*மாலையன்றிப் பாடாதென் வாய்"*
*2-திருவேங்கடமாலை.*

*"மாலை மதிக்குஞ்சி ஈசனும்*
*போதனும் வாசவனும்*
*நூலை மதிக்கும் முனிவரும்*
*தேவரும் நோக்கி அந்தி*
*காலை மதிக்குள் வைத் தேத்தும்*
*திருமலை, கைம்மலையால்*
*வேலை மதிக்கும் பெருமான்*
*உறைதிரு வேங்கடமே"*
*4-திருவேங்கடத்தந்தாதி*

சிவபிரான், பிரமன், இந்திரன், தேவர்கள் முதலானோர் இரவு பகலாகப் பாடித் துதித்துக் கொண்டிருக்கும் திருவேங்கடமலை தொன்மையானது; புனிதமானது; வேண்டுவார்க்கு வேண்டும் வரங்களை நல்குவது.

தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமான சீனிவாசன் மகிழ்ந்து வாழும் மலை திருவேங்கடமலை.

இம்மலையேறிச் செல்வோரின் மனத்துயர்போக்கும் மாலவனின் மலர்ப் பதங்கள் பணிவோம்.

மனமுருகிப் பாடி நிற்போரின் குலங்காக்கும் மாதவனின் மாண்பினைப் போற்றுவோம்.

குறைவொன்றுமில்லாத வாழ்வினைக் கோவிந்தன் தருவான்! திருவேங்கடம் செல்வோம்! தீவினைகள் வெல்வோம்! திருவனைத்தும் பெறுவோம்!



# இராமாநுஜர் திருவேங்கட யாத்திரை

டாக்டர். கே.ஏ. மணவாளன் - சென்னை.

ஆசார்யர்களில் இரண்டு விதம் உண்டு. சிஷ்யர்களிடம் பணிவிடைகளைக் கொண்டு அதனால் உள்ளம் மகிழ்ந்து அவர்களுக்கு அர்த்த விசேஷங்களை உபதேசிக்கும் ஆசாரியர்கள் ஒருவகை. சிஷ்யர்களிடம் எதையும் எதிர்பாராமல் அருளே வடிவெடுத்தவர்களாய் அவர்களுக்கு எல்லா அர்த்தங்களையும் மறைக்காமல் உபதேசிக்கும் ஆசார்யர்கள் இரண்டாவது வகை. இந்த இரண்டாவது வகைப்பட்ட ஆசாரியர்களை 'கிருபாமாத்ர ப்ரஸந்ந தேசிகர்கள்' என்று வைணவம் சிறப்பாகக் கொண்டாடி வருகிறது. பணிவிடைகளை எதிர்பார்த்து அர்த்தம் சொல்லும் ஆசிரியர்களை அனுவ்ருத்திப் பிரஸந்நாசாரியர் என்பர் பெரியோர்.



கிருபாமாத்ரப் பிரஸந்ந ஆசாரியர்களில் தலையாயவர் எம்பெருமானாராகிற இராமாநுஜர். இவர் சித்திரையில் செய்ய திருவாதிரைத் திருநாளில், செங்கயல் வாவிகள் சூழ்ந்த மதிபெரும்பூதூரில் திருவவதாரம் செய்தருளினார். முன்னோர்களால் ஏகாந்தத்தில் தனித் தனியாகச் சீடர்களுக்குச் சொல்லப் பட்டுவந்த முக்திநெறி மந்திரத்தை ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பிகளின் கட்டளையையும் மீறி, ஆசையுடையவர்களையெல்லாம் கூவி அழைத்து உபதேசித்தவர் இராமாநுஜர். இவருடைய இக்காருண்யத்தை 'யதிராசர் இன்னருள்' என்று கொண்டாடியுள்ளார் ஸ்ரீமணவாள மாமுனிகள்; 'காரேய் கருணை இராமாநுசர்' என்று போற்றுகிறார் திருவரங்கத்தமுதனார்; ஆழ்வானும் 'தயைகஸிந்து' என்று மனமுருகினார். இவரை 'நாயகஸ்ரீ' என்கிறார் வேதாந்த தேசிகர். இப்படிப்பட்ட காருண்யமாகிற பேரருள் எம்பெருமானுக்கே இல்லை என்று கொண்டாடி திருக்கோட்டியூர் நம்பிகளே, "வாரீர் எம்பெருமானாரே! என்று இராமாநுஜரை அழைத்துத் தழுவிக் கொண்டதாக குரு பரம்பரை நூல்கள் கூறுகின்றன. இத்தகு ஏற்றம் வாய்ந்த ஜகதாசார்யரான ஸ்வாமி இராமாநுஜர், திருவரங்கம் பெரிய கோயிலிலே கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், திருக்குருகைப்பிரான் பிள்ளான், கிடாம்பி ஆச்சான், அனந்தாழ்வான் முதலான மிகப்பெரிய வித்வான்கள் நிறைந்த கோஷ்டியிலே அமர்சுவையாயிரமான திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச் செய்து கொண்டிருந்தார்.

## "சிந்துபூமகிழும் திருவேங்கடம்"

இப்படி திருவாய்மொழிகால க்ஷேபம் நடக்கும்போது 'சிந்து பூமகிழும் திருவேங்கடம்' என்னும் திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறபோது திருவுள்ளம் நெகிழ்ந்து, சிஷ்ய கோஷ்டியினரை நோக்கி, புஷ்ப மண்டபமான பெரிய திருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருநந்தவனம் வைத்து புஷ்பங்களையுண்டாக்கித் திருமாலைக் கட்டிச் சாத்துவார் யாரேனும் உண்டோ? என்று அருளிச் செய்ய அவ்வளவிலே அனந்



தாழ்வான் என்னும் சீடர் எழுந்திருந்து 'அடியேன் கைங்கர்யம் செய்ய விடைகொள்கிறேன்' என்று விண்ணப்பம் செய்து, தண்டன் ஸமர்ப்பித்துத் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானையும் திருவடி தொழுது, திருநந்தவனம் அமைத்தார். அத்திருநந்தவனத்திற்கு 'இராமாநுசநந்தவனம்' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார். நாளும் நாண்மலர்கொண்டு மாலை கட்டி திருவேங்கடமுடையானுக்கு சமர்ப்பித்து வந்தார் அந்த உத்தம சீடர்.

இச்செய்தியைக் கேட்டு மிகவும் மகிழ்ந்த இராமாநுஜர் திருவேங்கடமுடையானைக் கோஷ்டியாருடன் சேர்ந்து மங்களாசாஸனம் பண்ண வேண்டும் என்று நிச்சயித்தார். பின்பு நம்பெருமாளை ஸேவித்து அவர் நியமனமும் பெற்று திருவேங்கட யாத்திரையை மேற்கொண்டார். முதலில் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளி திருக்கச்சி நம்பிகளை முன்னிட்டுக் கொண்டு பேரருளாளரான தேவாதிராஜனை மங்களாசாஸனம் பண்ணிப் பின்பு திருமலையாத்திரை பற்றிப் பேரருளாளனிடம் விண்ணப்பம் செய்ய, அவரும் 'சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை' என்று அருளிச் செய்து விடைகொடுத்தருளினார்.

இராமாநுஜரும் சீடர்கள் புடைசூழ சில நாட்களில் கீழ்த் திருப்பதிக்கு எழுந்தருளி, திருமலை ஆழ்வாரையும் திருத்தாழ்வரையிலே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீபாராங்குசர் பரகாலர் முதலான ஆழ்வார் பதின்மரையும் ஸேவித்து திருப்பதியிலேயே விடல தேவன் என்னும் அரசனைச் சிஷ்யனாக்கிக் கொண்டு மடத்தில் எழுந்தருளியிருந்தார். இச்செய்தியை அனந்தாழ்வான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டுத் திருமலையின்றும் இறங்கிவந்து, எம்பெருமானாராகிற இராமாநுஜரை ஸேவித்து, தேவரீர் திருவேங்கடத்து அப்பனை மங்களாசாஸனம் பண்ண திருமலைக்கு எழுந்தருள வேணும் என்று பிராத்தித்தார்கள்.

உடையவரும் ஆழ்வார்கள் தங்கள் பாதம் படியத் திருமலையேறி மங்களாசாஸனம் பண்ணுமையாலே, நாமும் ஏறக்கடவோமல்லோம் என்று சொல்லி ஆழ்வார்களைப் போலே இங்கிருந்தே மலையப்பனை ஸேவிக்கிறோம்; பல்லாண்டு பாடுகிறோம் என்று சொல்ல, அப்போது அனந்தாழ்வான் தேவரீர் மலையேறி வந்து மங்களாசாஸனம் செய்யவில்லையென்றால் அடியோங்களும் ஏறோம். இனி நந்தவன கைங்கர்யங்களும் செய்யோம் தேவரீர் எழுந்தருளாவிட்டால் இனி யாருமே மலையேற மாட்டார்கள் என்று உறுதியாக விண்ணப்பம் செய்ய இராமாநுஜரும் 'அப்போதொரு சிந்தை செய்தே' என்றபடி சிந்தித்து முடிவுக்கு வந்தவராய், ஆழ்வார்ச்சுனை பொய்கையில் நீராடி பன்னிரு திருமண்காப்புகளையும் சாற்றிக் கொண்டு, திரிதண்டஹஸ்தராய் காஷாய சோபி கமண்டலுரராய், அடிப்புளியாழ்வாரடியிலே திருமலை ஆழ்வாரை ஸேவித்துக்கொண்டு; 'பாதேந அத்யாரோஹதி' என்ற கணக்கில் ஸ்ரீவைகுண்டநாதன் நியமனம் என்று சொல்லி, முக்தசேதனன் பாதபீடத்தில் அடியிட்டு ஏறுவதுபோல் மிகவும் பக்தியோடு திருவேங்கடமுடையான் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டு, திருமலைக்காட்டு வழிகளில் ஏறி திருமலையப்பன் திருவடிகளை தியானித்துக் கொண்டு செப்பார் திண்வரையையும், பொற்சிகரங்களையுடைய மலையுச்சிகளையும், முத்துகள் சொரியும் மூங்கில் காடுகளையும், பன்மணிகளையும், பொன்னையும் சிந்தும் சுனைகளையும் கடந்து திருப்பரியப்பட்ட பாறையருகே அடியார்கள் குழாங்களுடன் சிறிது சிரமபரிகாரம் பண்ணிக்கொண்டு அமர்ந்திருந்தார்.

அவ்வளவிலே திருவேங்கடமுடையான் தீர்த்த ப்ரஸாதங்களுடன் பெரிய திருமலைநம்பிகள் எதிரே எழுந்தருளினார். திருமலைநம்பிகளைக் கண்ட இராமாநுஜர் அவர் திருவடிகளிலே தண்டன் இட்டு ப்ரஸாதங்களுடன் தேவரீர் எதிர்நோக்கி எழுந்தருள வேணுமோ? மலையில் யாரேனும் சிறியார் இல்லாயோ? என்று விண்ணப்பம் செய்ய, நம்பியும் 'நான்கு வீதிகளிலும் தேடினேன், என்னைக் காட்டிலும் சிறியாரைக் கண்டிலேன்' என்று சொன்னார். உடையவரும் சீடர்களும் இத்தைக் கேட்டு வியந்து நம்பிகளின் ஆத்ம குணத்தையும் நைச்சியத்தையும் புகழ்ந்தார்கள். பின்பு நம்பிகளை முன்னிட்டு மேலேயேறி, திருமலை த்வார கோபுரத்தை அணுகினார். அப்போது ஜீயர்களும் ஏகாங்கிளும் திருமலையப்பன் கைங்கர்யபரர்களான ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸ்ரீபாதம் தாங்குவார் போன்ற மலையப்பன் பரிஜனங்கள் எல்லோரும் எதிர்கொண்டழைக்க, உடையவரும் சீடர்களும் வைகுந்தன் திருவாசலிலே தண்டன் ஸமர்ப்பித்து, திருக்கோனேரியில் நீராடி, பன்னிருநாமங்களையும் சாத்திக்கொண்டு, நான்கு வீதிகளையும் ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி 'சிந்தாமணிகள் பகர் அல்லைப் பகல் செய்' என்கிறபடியே ரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மாடமாளிகைகளையும் கூடகோபுராதிகளையும், கண்களால் கண்டு ஆனந்தித்து அனந்தாழ்வானால் நிர்மாணிக்கப்பட்ட இராமாநுசநந்தவனத்துக்கு எழுந்தருளி கடாக்ஷித்து, வளர்த்ததனால் பயன்பெற்றேன்' என்று மகிழ்ந்து, அனந்தாழ்வானை அணைத்து மகிழ்ந்து சிறிது



நேரம் அப்பூம்பொழிலில் எழுந்தருளியிருந்தார். நான்கு திசைகளிலும் அம்மலையின் இயற்கைக் காட்சிகளைக் கண்டு அம் மலையப்பனின் திருமேனி எழிலைக் கண்டு உருகினார்.

திருவேங்கடம் கண்கவர் சோலைகளையும், சாரல்களையும் உடையது. எப்பொழுதும் சுனைநீர்களும், ஆற்றுநீர்களும், ஊற்று நீர்களும் நிறைந்து குளிர்ந்திருக்கும். 'தண்ணார் வேங்கடத்து, விண்ணோர் வெற்பன்' என்றார் ஆழ்வார். தேனேய் பூம்பொழில், விரையார்பொழில், கோல் தேன் பாய்ந்து ஒழுகும் குளிர் சோலை என்றும், மொய்த்த சோலை களையுடைய திருவேங்கடத்தில், அச்சோலைகளுக்கு அலங்காரமாகத் திகழும் செண்பகமாய் நிற்கும் திருவுடைய செண்பகம், செருந்தி, திருமகிழ், பாடலம், சுரபுன்னை புன்னாகம் முதலான தேன் சொரியும் மலர்களையுடைய திருப்பூமரங்களின் எழிலை வாய் மணக்கப் பாடியுள்ளார்கள் ஆழ்வார்கள். மற்றும் செவ்வந்தி, பிச்சி, இருவாட்சி, மல்லிகை, முல்லை தொடக்கமான கொடிமலரழகைக்காண கண் கோடி வேண்டும். மேலும் மொய்ப்பூந் தடம்தாழ்வரைகளில் செந்நீமலரும் சேரூர் சுனைகளில் மனோஹரமான செந்தாமரையையும் திருவேங்கடத்துத் தெண்ணீர்ச் சுனைகளில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையாரையும், கோனேரி வாழும் குருகு, கொக்கு நாரை தாரா முதலான பக்ஷிக்கூட்டங்களையும், மாம்பொழில் தழுவிய கோதிய மடக்குயில்களையும் அவைகளின் நாதங்களையும், கொண்டல் அதிரத் தோகை விரித்து நடமாடுகிற மயில்களின் நடனங்களையும், வண்டினங்கள் தென்னா தெனா என்று பண்பாடுகிற பாடலையும் கேட்டு ஆனந்தித்து மகிழ்ந்தார்.

பின்பு சீடர்கள் புடைசூழ, நிலம் கோட்டிடைக்கொண்ட ஞானப் பிறனாகிய வராகப் பெருமாளை மங்களாசாஸனம் பண்ணி, அவாவறச் சூழ்ந்தான் திருவாசலிலே தண்டனிட்டும், பின்பு ஸ்ரீபலிபீடத் தடியிலே தண்டனிட்டும் யமு



னைத்துறைவர் என்கிற, திருப் பூமண்டபத்தையும் ஸேவித்து, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, ஒரு மார்கழி மாத துவாதசி திதியில் சூரியோதயகாலத்தில் பாரதபுண்ய பூமியிலுள்ள ஸகல புண்ய தீர்த்தங்களும் வந்து சேரும் ஸ்வாமி புஷ்கரணீ என்று மிகவும் பிரசித்திபெற்ற ஸ்வாமி புஷ்கரணியில் தீர்த்தம் ஸ்வீகரித்து செண்பகத்திருவாசலிலே புகுந்து ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பித்தார். அதன்பின்பு திருமடைப்பள்ளி யாகசாலை திருமாமணி மண்டபத்தையும் ஸேவித்து, ஸேனை முதலியாரையும் வணங்கி, வேங்கடத்தரியையும் (நரசிம்மனையும்) ஸேவித்து ஆனந்த நிலையம் என்னும் திவ்விய விமானத்தையும் கண்ணாலே பருகுவாரைப் போலே அநுபவித்து, உள்ளே எழுந்தருளினார்.

பின்பு 'அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்' குலசேகரன் படியைக் கடந்து உள்ளே சென்று, 'திலதமுலகுக்காய் நின்ற தண்ணார் வேங்கடவிண்ணோர் வெற்பனான எண்ணம் புகுந்து தித்திக்கும் செந்தாமரைக்கண் செங்கனிவாய் நாற்றோள் அமுதையும், இரத்தினங்களால் இழைக்கப்பட்ட தண்டை முதலான திருவடிக்காப்புகளையும், கிரீடம் வரை பாதாதி கேச திவ்யாபரண திவ்வியாலங்கார சோபைகளையும் திருமார்பு நாச்சியாரையும் திருவாழி திருச்சங்குகளையும் ஆதிராஜ்ய ஸூசகமான திருமுடி ஒளியையும் வைத்த கண் வாங்காமல், இமையாமல் மறுபடியும் மறுபடியும் ஸேவித்து, அனுபவித்து உலகமுண்ட பெருவாயா உலப்பில் கீர்த்தி அம்மானே! "அலர்மேல் மங்கையுறை மார்பா! புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்று அடிக்கீழ் அமர்ந்து புகுந்து, பூவார் கழல்களைக் கிட்டி அஞ்சலி பண்ணி அனுபவித்து நின்றார். மயிர்கூச்செரிய, கண்கள் குளமானார்! இம்மலைக்கு வந்து நின்ற பயன் பெற்றேன் என்று இவருக்கு எம்பெருமான் தீர்த்த ப்ரஸாதங்களையும், தன் பூவார் பொன்னங்கழலான திருவடிகளையும் ப்ரஸாதித்தார். இராமாநுஜரும் அமுதக்கடலில் மூழ்கியவராய், ஆனந்தபரவசராய் என்னே இது! பூலோக வைகுண்டமாயிருந்தது! என்று எல்லோரிடமும் சொல்லி வியந்து கொண்டாடி இவ்விடம், விண்ணோர் நிலமாகையாலே இந்த விண்ணோர் வெற்பில் நிகரில் அமரர் முனிக் கணங்கள் என்றருளிச் செய்த நித்யஸூரிகளன்றோ இங்கு வசிப்பர். நாம் இம்மலைமேல் இருக்கவொண்ணாது என்று, அப்போதே மலையினின்றும் இறங்கமுற்பட்டபோது, பெரிய திருமலை நம்பி திவ்விய தேசங்களிலே மூன்று நாட்கள் வசிக்க வேணும் என்பது முன்னோர் அநுஷ்டானம் என்று சொல்ல, உடையவரும் சம்மதித்து, மூன்று நாளும் எம்பெருமான் தீர்த்தம் தவிர ஒன்றும் அமுது செய்யாமல் அப்பொழுதைக்கப் பொழுது என் ஆரா அமுதமான அப்பனை ஸேவித்திருப்பேன் என்று அவனையே நம்மாழ்வாரைப் போலே 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை'யாய் உண்டு மகிழ்ந்து, அப்பனுக்குத் திருப்பல்லாண்டு பாடி நின்றார். அப்போது திருவேங்கடமுடையான் இவருக்கு தன் பூவார் கழல்களை சிரோபூஷணமாக்கி, உமக்கும் உம்முடையார்க்கும் உபய விபூதி ஐச்வர்யத்தையும் தந்தோம் என்று நம் தெற்கு வீட்டில் சொன்னோமே என்று நினைவு படுத்த உடையவரும் மஹாப்ரஸாதம் என்று மகிழ்ந்து ஏற்று பிரியாவிடை கொண்டு கீழ்த்திருப்பதிக்கு எழுந்தருளினார்.

# கலியன் கண்டநுபவித்த கலியுகக்கடவுள்

ஸ்ரீ உ.வே. வித்வான் இளையவில்லி பூவராஹாசாரியர்
ஆழ்வார்திருநகரி.

"க்ருதே அத்ரிஸுநுர் பகவான்
த்ரேதாயாம் ரகு நந்தன: ।
த்வாபரே நந்தஸூநுச்ச
கலௌ வேங்கடநாயக: ॥

என்கிற ப்ரஸித்தமான ச்லோகத்தின்படி (க்ருதயுகத்தில் அத்ரி மஹர்ஷியின் புதல்வனாயும் (தத்தாத்ரேயர்), த்ரேதாயுகத்தில் ரகுகுலத்தில் இராமனாயும், த்வாபரயுகத்தில் ஸ்ரீக்ருஷ்ணனாயும் அவதரித்த எம்பெருமான், பின்னானார் வணங்கும் சோதியாய், கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் திருவேங்கடமலையில் "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பாய்" நின்ற திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்கிறான்.) திருமலையில் எழுந்தருளியிருக்கிறான். அவ்வெம்பெருமானை, ஆழ்வார்கள் பதின்மர்களில் கடைசியாக அவதரித்த "கலியன்" என்று பெயர் பெற்ற திருமங்கையாழ்வார் எங்ஙனம் தம் ஊனக்கண்களாலும், நெஞ்சென்னும் உட்கண்ணாலும் கண்டநுபவித்தார் என்பதைச் சிறிது அநுபவிக்க வாசகர்களை அழைக்கிறேன்.

ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாருக்கு ஒரு தனிச்சிறப்பு (ஏற்றம்) உண்டு. அதாவது, பெரிய திருமந்திரம் என்று புகழ்ப்பெற்ற திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை அந்த மந்திரத்துக்கு உள்ளீடான வஸ்துவான ஸ்ரீமந்நாராயணனிடத்திலேயே உபதேசம் பெறும் பேறு பெற்றார். ஆலிநாட்டுக்கு அரசான அவர், தெய்வத்துக்கு அரசனான எம்பெருமானிடம் மரங்களுக்கு அரசான அரச மரத்தடியில் மந்திரங்களுக்கு அரசான (மந்த்ரராஜம்) திருமந்திரத்தை கேட்கும் பாக்கியம் பெற்றார். முன்னொருகால் தானே சிஷ்யனாய் நின்று பதரிகாச்ரமத்தில் இம்மந்திரத்தை ஆசார்யனாய் நின்ற நாராயணனிடத்தில் கேட்டான். ("தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று



திருமந்திரத்தை வெளியிட்டருளினான்" என்பர் பிள்ளை உலகாசிரியர்.) பின்பு நேரே உபதேசித்தது இவர்க்கே. இத்துணை பெருமை மற்ற ஆழ்வார்கள் எவர்க்குமில்லை. மூலமந்திரத்தை மட்டிலும் அல்லாமல் பொருளையும் இவர் நன்கு அறியும்படி உபதேசித்தருளினான். "நான் கண்டு கொண்டேன். நாராயணா என்னும் நாமம்" என்று ஒருகால் சொன்னாற்போல் ஒன்பதின் கால் சொன்னார் இவர்.

பின்பு இத்திருமந்திரம் விளைந்த இமயமலையில் உள்ள திவ்ய தேசங்களிலிருந்து தொடங்கி, பல பல அர்ச்சா ஸ்தலங்களை அநுபவிக்க அளவு கடந்த ஆசை ஏற்பட்டது. "ராஜகுமாரனுக்குப் பிடிதோறும் நெய் சேர்க்க வேணும். இவர்க்கு (இவ்வாழ்வார்க்கு) அடிதோறும் அர்ச்சை சேர்க்க வேணும்" என்பது நம் பூருவாசாரியர்கள் அருளிச்செய்யும் அழகிய திவ்ய ஸூக்தி. அதன்படி அர்ச்சாவதார ப்ராவண்யமே (ஈடுபாடே) வடிவெடுத்தவர் இவ்வாழ்வார். திருப்பிரிதியை அநுபவித்தார் பத்துப் பாசுரங்களினால் (1-2 திருமொழி, இதற்குக்காரணம், முதல் திருமொழியில் (வாடினேன் வாடியில்) "குடந்தையே தொழுது" (1-1-2) என்றும், "தஞ்சை மாமணிக் கோயிலே தொழுது" (1-1-6) என்றும், உகந்தருளின நிலத்தில் (அர்ச்சையில்) எம்பெருமானாலேயே திருமந்த்ரமும் அதன் அர்த்தமும் தமக்குப் பெருப் பேறுகக் கிடைத்ததாகத் திருவுள்ளம் பற்றி (நினைத்து) அத்திவ்ய தேசங்களை அநுபவித்தார். திருமந்திரத்தின் முடிந்த பொருள் உகந்தருளின நிலங்களில் எழுந்தருளியிருக்குமவனே தஞ்சம் என்பதாகையால் அர்ச்சையில் புகுந்து அநுபவிக்கத் தொடங்குகிறார்.

"இத்திருமந்திரத்துக்கு அர்த்தமாகிறதுதான் ஸ்வாமித்வ ஸௌலப்யமிறே. கர்ஷகனானவன் (குடியானவன்) பயிர்த்தலையிலே (வயலருகே) குடில் கட்டி (குடிசை) நோக்குமாபோலே, ரக்ஷ்யம் (ரக்ஷிக்க வேண்டிய பொருள்) இருந்தவிடத்தே வந்து ரக்ஷிக்கையிறே ஸௌலப்யம் (எளிமை) உகந்தருளின நிலங்களிலே வந்து, ஸந்நிதி பண்ணி இத்தை நோக்குகையாலே உடையவன என்று ஸ்வாமித்வ (தலைமை)ப் ப்ரகாசமுமாயிருக்கிறது. எதிர்த்தலை (ஜீவாத்மாக்கள்) பாராதே வந்து, அவஸர (நேரம், காலம்) ப்ரதீக்ஷனாய் (எதிர்நோக்குமவனாய்) அந்தர்யாமி ரூபத்தாலே இருக்கிற இருப்பு, ஸ்வாமித்வ கார்யமிறே. அவ்வளவன்றிக்கே, கண்ணாலே கண்டநுபவிக்க வேணுமென்று, அபேக்ஷ (விருப்பம்) பிறந்தவன்று அப்போதே அநுபவிக்கலாம்படி கோயில்களிலே வந்து நிற்கிற விதுக்கு மேற்படவில்லையிறே ஸௌலப்யத்துக்கு. ஸம்பந்த ஜ்ஞாநம் (உறவு பற்றிய அறிவு) பிறந்தவநந்தரம், அநுபவாபேக்ஷ பிறந்தால், அப்போதே இவ்வுடம்போடே அடிமை செய்யலாம்படி இராதிறே பரமபதத்தில், "அநுபவிக்கவேணும்" என்று அபேக்ஷ பிறந்தபோதே அவ்வுடம்போடே அநுபவிக்கலாம்படி இருக்குமிறே உகந்தருளின நிலங்களிலே. இப்படி ஸௌலப்யத்துக்கெல்லையான, உகந்தருளின நிலங்களெங்கும் புக்கு, அநுபவிக்கக்கோலி, அதில் இப்பாஷை (தமிழ்) நடையாடும் இடத்துக்கு எல்லையாயிருக்குமிறே திருமலை, (திருப்பதி) அவ்வளவிலே நில்லாதிறே இவருடைய (திருமங்கை ஆழ்வாருடைய) ஆசையானது, ஆகையாலே உகந்தருளின நிலங்களுக்கு எல்லையான ஹிமவானில் திருப்பிரிதியளவும் சென்று அவ்விடத்தை அநுபவிப்பதாகத் திருவுள்ளத்தோடு கூட்டுகிறார்" என்கிற வ்யாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையின் திவ்ய ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கவுரியன.

இப்படி திருப்பிரிதி தொடங்கி அநுபவிக்கத் தொடங்கிய ஆழ்வார், —திருமந்த்ரம் விளைந்த ஸ்ரீபதரியையும், ஸ்ரீபதரிகாச்சிரமத்தையும், ஸ்ரீசாளக்ராமத்தையும், ஸ்ரீநைமிசாரண்யம், ஸ்ரீஅஹோபிலம் என்று வரியடைவே அநுபவித்தார் (முதற்பத்தில் ஏழாம் திருமொழி முடிய).

முதற்பத்து எட்டாம் திருமொழி தொடங்கி இரண்டாம் பத்து முதல் திருமொழி முடிய திருவேங்கடத்துறை செல்வனை 40 பாசுரங்களால் பரவி அடிபணிந்து அநுபவிக்கும் அழகு வாசாம் அகோசரம் (சொல்லுக்கு அப்பாற்பட்டது)

திருவேங்கடத்தை அநுபவிப்பதற்கு முன் ஸ்ரீஅஹோபிலம் நரசிங்கனைத் திருவடி தொழுதார் திருமங்கை மன்னன்.

நின்ற செந்தீமொண்டு சூறை
நீள்விசும் பூடிரிய (1-7-5)

என்றும்,

"கனைத்த தீயும் கல்லும்" (1-7-7)

"தேய்ந்த தீயால் விண்சிவக்கும்" (1-7-8)

என்றும் விரோதிகளுக்கு உட்புகவரிதான் தேசம் என்று வருணித்தார். இதைக்கேட்ட எம்பிரான், இப்படி இவர் ஸ்ரீஅஹோபிலத்தில் அடியிடவொண்ணுத நிலவெம்மையை அநுஸந்திக்கும் இவர்க்கு "பொங்குநீர் செங்கயல் திளைக்கும் சுனையுடைய குளிரருவி வேங்கடத்தைத் தனது நிர்ஹேதுக க்ருபையினாலே காட்டிக் கொடுத்து, "ஆழ்வீர்! வாரும் திருமலைக்கு. அங்கு நம்முடைய விரோதி நிரஸந சீலத்தையும் (சத்ருக்களை அழிக்கும் தன்மையையும்) நம்மடியார்களுடன் கூடிக்குலாவும் படியையும் இன்னும் மற்றைப் படிகளையும் காணலாம்" என்றழைத்தான். இதைக்கேட்ட ஆழ்வார் தம் நெஞ்சை நோக்கி "அப்படியே செய்வோம். திருவேங்கடம் சென்றடைவோம், வா நெஞ்சே! என்று நெஞ்சை நோக்கி அருளிச்செய்யும் பதிகம் "கொங்கலரந்த" என்று தொடங்கும் பதிகம். மேலும் ஸ்ரீஅஹோபிலம் தெலுங்கு மட்டிலும் பேசும் தேசம் திருமலை தெலுங்கும், தமிழும் இரண்டும் அறிந்தவர்கள் வாழும் இடம். ஆழ்வாரோ தெலுங்கு பாஷை அறியாதவர். தமிழே அறிந்தவராதலால் திருமலையில் உள்ள தமிழறிந்த அன்பர்களோடு எம்பெருமானின் கல்யாண குணங்களைச் சொல்லி கூடியிருந்து குளிர்ந்து அநுபவிக்கலாம். இந்த வசதி (போதயந்த: பரஸ்பரம் - ஒரு பக்தர் மற்றொருவருக்கு எம்பெருமான் குணநலங்களைப் பேசியும், அவர் சொல்லக் கேட்டு மகிழ்வதுமாகிற வசதி) சிங்கவேழ் குன்றத்திலே கிடையாதாகையாலே திருமலைக்கு எழுந்தருள விரும்பினார் ஆழ்வார். "தமிழ் பாஷை நடையாடுகிறதுக்கும் எல்லையான நிலமாயிருக்குமிறே" என்பது வ்யாக்யான ஸ்ரீஸூக்தி.

"கொங்கலர்ந்த மலர்க்குருந்தம்
ஒசித்த கோவலன் எம்பிரான்
சங்கு தங்கு தடங்கடல்
துயில்கொண்ட
தாமரைக்கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய் பிளந்த
புராணர் தம்மிடம்
செங்கயல் திளைக்கும் சுனை
திருவேங்கடம் அடைநெஞ்சமே"
(1-8-1)

"அங்கண்ஞாலம் அஞ்ச" என்று தொடங்கும் கீழ் பதிகத்தில் ஹிரண்யனைக் "கொலைக்கையாளன்" என்று பகவானின் எதிரே தன்னுடைய விரோதம் தோற்ற நின்றான் என்று வருணித்தார். நேரில் தோற்றும் பகைவனைக் காட்டிலும் மிகவும் ஆபத்தை விளைவிப்பன் மறைந்திருந்து கொல்ல வருமவன். ஆகவே, ஆழ்வார் இப்பதிகத்தில் கண்ணபிரான் திருவாயர்பாடியில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளருங்கால் கம்சனால் ஏவப்பட்டு மறைந்து வந்த எதிரிகளை நினைத்து வயிறெரிகிறார். கம்ஸனால் உத்தரவிடப்பட்ட ஓர் அசுரன் திருவாயர்பாடியில், அடியே பிடித்துத் தலையளவும் பூத்து, மிகவும் அழகியதாய், மிக்க வாசனையை அள்ளி வீசுவதான ஓர் குருந்த மரம் நின்றது. அதில் வந்து ஆவேசித்தான் ஓரசுரன். கண்ணபிரான் அதனைக் கண்டு, "இதழகிதாயிருந்தது முறித்துக் கார்யம் கொள்வோம்" என்று யோசித்தான் (பேர்த்து எடுத்தான்). மாரீசன், ராமாவதாரத்தில், மானாகி வந்தான். பொன்னொத்த மானென்றே அதைப் பிடிக்கக் கருதினான் காகுத்தன். அவன் உண்மையில் அரக்கன் என்று நினையாதாப்போலே இங்கும் அசுரன் தன்னை நலியத்தேடி ஓர் குருந்தமாய் நிற்கிறான் என்று நினைத்தானல்லன். ஆகவே தான் ஆழ்வார் "குருந்தம் அழித்த" என்னாதே "ஒசித்த" என்றருளிச்செய்கிறார்.

இந்த உபகாரம் (உதவி) செய்வதற்காகவே, சங்குகள் பல சேர்ந்த திருப்பாற்கடலில் துயில் கொண்டவன். "க்ஷீரார்ணவ நிகேதன:......... ஆகதோ மதுராம் புரீம்" (பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் வடமதுரை மைந்தனாய் வந்தவதரித்தான்) என்பது புராணம். மேலும் இத்திருவேங்கடவனே மிகுந்த ஆடம்பரத்துடன் வந்த புள்ளின் (பகாஸுரனின், கொக்கின்) வாய் பிளந்தவன். இப்படி அடியார்களின் பகைவர்களை அழிப்பதை வெகுகாலமாகச் செய்து போருமவன் (புராணர்) எழுந்தருளியிருக்குமிடம் திருமலை.

சிங்கவேல்குன்றம் நீர்பசையற்ற இடமாயிருந்தது. ஆகையால் அங்கு எல்லாம் உலர்ந்து இருந்தது. அதற்கு எதிர்த்தட்டாக இருப்பது திருவேங்கடம். நோக்கும் பக்கமெல்லாம் நீர்நிறைந்திருப்பதால் செங்கயல்கள் (மீன்கள்) களித்து வாழும் திவ்யதேசம். இப்படிப்பட்ட திவ்ய தேசத்தைப் பற்றி நெஞ்சே! நீயும் அம்மீன்களைப் போல் "தயரதன் பெற்ற மரதகமணித்தடமான" ஸ்ரீநிவாஸனின் மார்வகத்தே புக்கு, நீர் மங்கையோடு கூடி நித்யாநுபவம் பண்ணப் பாராய்" என்கிறார். நாரத்தை (ஜலத்தை)ப் பற்றிய மீன்கள் வாழ்கின்றாப்போலே நாராயணனைப் பற்றிய நீயும் வாழப் பாராய். நீரைப் பிரிந்த மீன் வாழாது. நீர் வண்ணனைப் பிரிந்த நீயும் வாழகில்லாய் நெஞ்சமே! சொன்னேன். திருவேங்கடம் அடை". ஆக இப்பாட்டால் விரோதிகள் அநுகூல வேஷத்துடன் இவனை அழிக்கவந்தாலும் அழிப்பவன் ஆழி நீர் வண்ணன் ஆன திருவேங்கடத்தான் என்கிறார் பரகாலன்.

"பள்ளியாவது பாற்கடலரங்கம்
இரங்க வன்பேய்முலை
பிள்ளையாய் உயிருண்டவெந்தை
பிரானவன் பெருகுமிடம்
வெள்ளியான் கரியான் மணி
நிறவண்ணன் என்றெண்ணி
நாடொறும் தெள்ளியார் வணங்கும்
மலை திருவேங்கடம்
அடைநெஞ்சமே" (1-8-2)

கீழ்ப்பாட்டில் பாற்கடல் யோகநித்திரையை சங்கு தங்கு... இத்யாதியால் அநுபவித்தார் ஆழ்வார். அந்த அநுபவம் பின்னாட்டிற்று. இப்பாட்டில் சயனத் திருக்கோலம் கொண்டருளிய இரண்டு இடங்கள் நினைவுக்கு வர அவைகளை அநுபவிக்கிறார். ஒன்று ஸ்ரீரங்கசாயித்வம் (திருவரங்கத்தில் கிடை) மற்றொன்று யசோதை தொட்டிற்கிடை (பள்ளி இத்யாதி) திருப்பாற்கடலை நம் பூருவர்கள். "கூப்பீடு கேட்குமிடம்" என்று கூறுவர். பிரமன் முதலிய தேவதைகளுக்கு அசுரர்களாலும் அரக்கர்களாலும் நலிவு ஏற்பட்டு "எந்தாய்! எங்கள் இடர் கடிந்து (போக்கி) அருளவேணும் என்று பாற்கடலில் சென்று முறையிடுவர்கள். அவ்வளவு தூரம் செல்லமுடியாத மனிதர்களுக்காக அவன் வந்து கிடக்குமிடம் திருவரங்கம் பெரியகோயில்.

"இரங்க இத்யாதி" : பெற்ற தாய் போல் பேய்ச்சி (பூதனை) வந்தாள். அவள் முலையை சிறு குழவியான கண்ணன் கைக

ளால் பிடித்து பால்குடிக்கத் தொடங்கியவுடன் முலையிலிருந்து தானே பால் பெருகத் தொடங்கிற்று. இதை "முலை இரங்க" (பால்சுரக்க) வென்கிறூர்.

அல்லது "வன் பேய் இரங்க" என்று கொண்டு அப்பூதனை கதறும்படியாக என்றும் கொள்ளலாம். கண்ணனாகிற சிறு குழந்தையைக் கண்டும், தன் விஷம் கலந்த பாலைக் கொடுத்து மாய்க்கவெண்ணினாளே! இவள் நெஞ்சின் கொடுமைதான் என்னே! என்று ஆழ்வார் ஆச்சரியப்பட்டு வன் பேய் (வலிய-இளகாத நெஞ்சையுடைய பேய்ச்சி) என்கிறூர். அப்பூதனையின் முலையை, யசோதைப் பிராட்டியின் முலையாகவே நினைத்து, "ஒரு முலையை வாய்மடுத்து, ஒருமுலையை நெருடிக்கொண்டு பிள்ளைத் தனத்தில் ஒன்றும் குறைவின்றிக்கே அமுது செய்தருளினாள். குழந்தைக்கு பூதனையின் உயிரையும் சேர்த்துக் குடிக்கும் ஆற்றல் உண்டோ? எனில், பிள்ளைத் தனத்தாலே உயிருக்கும், முலைப்பாலுக்கும் வாசியறியாதே அமுது செய்தான். பாலை உறிஞ்சி இழுக்க, உயிரும் உடன் வந்தது. "பிரானவன் பெருகுமிடம்" எனக்குக் குலநாதனான உபகாரகன் வர்த்திக்கும் இடம். (பெருகை-வளருகை) இதன் கருத்தாவது - தொட்டிலில் கிடந்த க்ருஷ்ண சிசு பேயுருண்ட பின்பு, நிற்கக்கற்றது திருமலையிலே. சிறு குழந்தை பால் குடித்தபின்னர், நின்று விளையாடத் தொடங்கும். அதேபோன்று கண்ணன் பூதனையின் பாலைக்குடித்து, உயிரை மாய்த்த பின்பு, ஆச்ரித விரோதி தொலையப்பெற்ற சந்தோஷத்தால் திருமலையில் நின்று களிக்கிறுன் என்கிறூர் ஆழ்வார்.

"வெள்ளியானித்யாதி" - பகவான், க்ருதயுகத்தில் வெளுத்த நிறத்தையுடையனாய், த்வாபர யுகத்தில் ச்யாம நிறத்தையுடையனாய், கலியுகத்தில் கறுத்த நிறத்தையுடையனாய் இருப்பன். இந்நிறமெல்லாம், அவனுடையதாகையாலே இவ்வாழ்வார்க்கு மிகவும் இனியதாய் இருக்கிறது.

"தெள்ளியார்"என்று தெளிந்த அறிவையுடையவர்களைக் கூறுகிறது. அறிவுக்குத் தெளிவாவது - திருவேங்கடமுடையானிடம் இவ்வுலகச் செல்வம் மேலுலகச் செல்வம் என்று அழியக்கூடியதும், அல்பமானதும், வெறுக்கத்தக்கதும், முடிவில் நரகத்தில் கொண்டு தள்ளும் அல்ப பலங்களை யாசியாமல் அவனையே (அவன் கைங்கர்யத்தையே - "உன்தன்னோடு உற்றமேயாவோம், உனக்கே நாமாட் செய்வோம்" என்று இரப்பவர்கள். இத்தெள்ளியார் வணங்கும் - நித்யஸூரிகளைப் போலே இடைவிடாமல் கைங்கர்யம் செய்யும்மலை - திருவேங்கடமலை. "நெஞ்சே! இம்மலையைச் சேர்ந்து வாழப்பார்! (என்று மறைமுகமாக நமக்கு உபதேசிக்கிறூர் கலியன்.) 'தெள்ளியார்' என்று திருமழிசைப்பிரான் போல்வாரைக் குறிக்கிறது என்பது அரும் பதவுரை.

மூன்றும் பாட்டு :

"நின்ற மா மருது இற்று வீழ
நடந்த நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொழும்
இணைத்தாமரையடி எம்பிரான்
கன்றிமாரி பொழிந்திடக்கடிதா-
நிரைக்கிடர் நீக்குவான்
சென்று குன்றமெடுத்தவன்
திருவேங்கடம் அடைநெஞ்சமே"
(1-8-3)

கீழ்ப்பாட்டிலே, "பெருகுமிடம்" என்று யசோதைப்பிராட்டியின் தொட்டிலில் கிடந்தவன் நிற்கக்கற்றது திருமலையில் என்றூர். இப்பாட்டில், நடைகற்று அவன் செய்தவற்றை விவரிக்கிறூர்.

"நின்றமாமருது":- மருது என்றுலே, மரமான தன்மையாலே அது நிற்கத்தானே செய்யும். 'நின்றமாமருதம்' என்று (நின்ற என்ற) அடைமொழி தேவையா? என்ற கேள்வி எழும்? கம்ஸனால் ஏவப்பட்ட அசுரன் கண்ணனை நலிய, அம்மரத்தில் ஆவேசித்தபடியாலே பேராதே நின்ற மரம். மேலும் "ம" (மிகப் பெரிய) என்றதுக்கு கருத்து என்? என்னில், நல்லவேளை, அப்பெரிய மரம் இற்று விழும் போது கண்ணன்மேல், விழாமல், அப்பால் விழுந்ததே. கண்ணன் மேல் விழுந்திருந்தால் என்னவாயிருக்கும் என்று பயப்படவேண்டிய பெரிய மரம்.

நடந்த "நின்மலன்":- அம்மரம் முறிந்து விழும்படியாக நெஞ்சில் நினைவின்றிக்கே நடந்த சுத்தியை 'நின்மலன்' என்கிறூர். அதாவது - இவன் நடக்க அம்மரம் தன்னடையே முறிந்தது. கூரத்தாழ்வான் தம்முடைய அதிமாநுஷ ஸ்தவத்தில் "ஸா பூதநா சகடம் அர்ஜுநயோச்ச யுக்மம், பால்யோசித, அந்யபர சேஷ்டித விஷ்புலிங்கே" என்றருளிச்செய்கிறூர். அதாவது பூதனை, சகடாஸுரன், மருதமரம் இவைகளை அழிக்கவேணும் என்று நெஞ்

சில் நினைத்துக் கண்ணன் ஓர் கார்யம் செய்யவில்லை, குழந்தைப் பருவத்துக்கு ஏற்றபடி வேறு ஓர் செயலைச் செய்ய இவ்வெதிரிகள் தன்னடையே மாண்டொழிந்தனர். தன்னில் விழுந்த விட்டில் பூச்சியை நெருப்பு நினைத்தா அழிக்கிறது? விரோதி நிரஸநம், நெருப்பின் அழிக்கும் தன்மைபோன்று எம்பெருமானுக்கு இயற்கையானது, குற்றம் அசுரர்களைச் சார்ந்ததே.

"நேமியான்":- சக்ராயுதத்தையுடையவன், விரோதிகளை அழிக்க தான் எந்தச் செயலும் செய்ய வேண்டா. "கருதுமிடம் பொருது கைநின்ற சக்கரத்தன்" என்கிறபடியே விரோதியை போக்கு கைக்கு ஈடான ஆயுதம் உடையவன். இப்படியிருக்க அவ்வெம்பெருமான் வந்து பிறந்து மருதினிடைநடந்து ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டானே என்று வருந்துகிறுர் கலியன்.மெள "(என்று மித்யாதி)":- பரமபதத்தில் ஒரு நாடாக, நித்ய ஸூரிகள் பரிய விருக்குமவன், நாட்டில் பிறந்து மனிசர்க்காய் படாதனபட்டான்.

(கன்றிமாரி இத்யாதி):- இந்திரனுக்கு என்று திருவாயர் பாடியில் ஆயர்கள் விழவெடுக்க, அதைத் தவிரும்படி உத்தரவிட்டு, கோவர்த்தனத்துக்கு அப்பூசனை செய்யும்படி கூறி, கண்ணபிரான் தானே "அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும், தயிர் வாவியும், நெய்யளறும் அடங்கப் பொட்டத்துற்று" என்கிறபடியே அமுதுசெய்தருள, இந்திரன் சீற்றமடைந்து, கல்லொடு கார்பொழிய, தங்களைத்தாங்களே காப்பாற்றிக் கொள்ளும் பரிகரம் ஒன்றுமில்லாத பசுக்கூட்டங்களின் மேல், ஒரு துளி நீரும் படாதபடி ஓடிச்சென்று குன்றெடுத்துக் காப்பாற்றினான். அன்று ஒருமலையை எடுத்துக் காத்தவன் இன்று மலையிலே நின்று ரக்ஷிக்கப் பார்த்தான். நெஞ்சே! அவனை அடை.

நாலாம் பாட்டு:

"பார்த்தர்க்காய் அன்று பாரதம்
கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர்,
கோத்து அங்கு ஆயர்தம்பாடியில்
குரவை பிணைந்த எம் கோவலன்
ஏற்றுவார்தம் மனத்துள்ளான்
இடவெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்த நீர்த்தடஞ்சோலைசூழ்
திருவேங்கடம் அடைநெஞ்சமே"
(1-8-4)

ஒரு பக்ஷி (பொங்குபுள்ளினை வாய்பிளந்த)யையும், ஒரு மரத்தையும் (கொங்கலர்ந்த குருந்தம பேயையும் (பேய்முலை உண்டவன்) மருதையும் வென்றவளவேயோ? அதிரத, மஹாரதர்களான பீஷ்மர், த்ரோணர் முதலானவர்களைத் திரட்டிக் கொண்டு கிடந்த துஷ்டர்கள் கூட்டத்தையெல்லாம் வென்றுன். அப்படிப்பட்டவன் அபலைகள் கைகளிலே அகப்பட்டுக் கூத்தாடுகிறுன் என்று திருவேங்கடமுடையானின் வீர, ச்ருங்கார ரஸத்தை அநுபவிக்கிறுர் இப்பாட்டில்.

(பார்த்தற்காய் இத்யாதி):-

த்வாபாரயுகத்தில் மகாபாரத யுத்தத்தில் அர்ஜுநனுக்காக சேனையை அணிவகுத்தான். பிறகு வெற்றி தன் பக்ஷத்திலேயே ஆகும்படியும், துர்யோதனாதிகள் தோல்வியையே தழுவும்படியாகவும் பாண்டவ பக்ஷப்ாதியாக விளங்கினான்.

("பரஞ்சுடர்"):- தர்மபுத்தரின் தலையிலே அபிஷேகத்தை (மகுடத்தை) வைத்து, த்ரெளபதி குழல் முடிந்த பின்பு திருமேனியில் பிறந்த ஔஜ்வல்யம் (ஒளி). விபீஷணனை இலங்கையில் முடிசூட்டும்வரை, இராமனின் உள்ளத்தில் நிம்மதியும் ஸந்தோஷமும் இருக்கவில்லை. முடிசூட்டிய பின்னரே "விஜ்வர:" (உள்தாபம் நீங்கியவனாய்) "ப்ரமுமோதஹ" (மிக்க மகிழ்ச்சி எய்தினான்) என்று வால்மீகி கூறும்படி ஆனான். அதேபோன்று ஆச்ரிதரான பாண்டவர்களின் விருப்பத்தை நிறைவேற்றிய பின்னரே "பரஞ்சுடர்" ஆனான். "பார்மல்கு சேனையவித்த பரஞ்சுடர்" என்றுர். இதனையே நம்மாழ்வாரும் ஆச்ரித விரோதிகளை அழித்ததனால் அவனுக்கு ஒளிமல்குமே ஒழிய குறையாது. அதனால் அவனுக்கு தோஷமும் கிடையாது. "அங்கண் ஞாலம் - பொழ்ந்த புனிதன்" என்றுர் கலியன் தாமே. இரணியனைக் கொன்று குற்றம் (தோஷம்) அடையாதவன். மேலும் பரிசுத்தன். (இதனால்-ராவணனைக் கொன்று ராமனுக்கு ப்ரஹ்மஹத்தி தோஷம் வந்தது முதலாகச் சொல்லுமதெல்லாம் மதிகேடர் வார்த்தை என்று காட்டுகிறுர் ஆழ்வார்.)

"குரவை பிணைந்த எம்கோவலன் ஏத்துவார் தம் மனத்துள்ளான்" என் கையாலே இக்குரவைக் கூத்தை அநுஸந்தித்து (நினைத்து) அதிலே ஈடுபட்டு ஏத்துமவர்களுடைய இதயத்திலே விடாதே இருக்குமவன் நம்மாழ்வார் "குரவையாய்ச்சிரோடு கோத்ததுவும்" என்று ஈடுபட்டார். அப்பாசுரம் சொல்லுமவர்கள் இதயத்தை என்றும் விடாதவன் திருவேங்கடத்தான்.



LORD VENKATESWARA, TIRUMALA
With his Consorts (Snapana Tirumanjanam)



SRI MALAYAPPA SWAMY WITH SRIDEVI & BHUDEVI



SRI MALAYAPPA SWAMY WITH SRIDEVI & BHUDEVI



LORD VENKATESWARA, TIRUMALA
With his consorts (Sravana Nakshatra Alankaram)



LORD VENKATESWARA WITH HIS CONSORTS (Vasanthotsavam)

(இடவெந்தை-இத்யாதி):-

திருவிடவெந்தை என்ற திவ்ய தேசத்திலே வந்து சேர்ந்தான் - அதேபோன்று ஏத்துவார் நெஞ்சுவிட்டுப்போகமாட்டான் என்று தெரிவிக்கக் கருதியே திருவிடவெந்தையை ஈண்டு நினைப்பூட்டுகிறார் ஆழ்வார். இவ்வேற்றங்களையுடைய திருவேங்கடத்தான் விரும்பியுறைகின்ற மலை, தீர்த்தங்களாலே (இம்மைப்பயன்களையும், மறுமைப்பயன்களையும் அறிக்கவற்றுனவை) சூழப்பட்டது. அவ்விடத்தை நெஞ்சே அடை.

ஐந்தாம் பாட்டு:

**"வண் கையான் அவுணர்க்கு**
**நாயகன்**
**வேள்வியில் சென்று மாணியாய்**
**மண்கையால் இரந்தான் மராமரம்**
**ஏழும் எய்த வலத்தினான்**
**எண்கையான் இமயத்துள்ளான்**
**இருஞ்சோலைமேவிய எம்பிரான்**
**திண்கை மா துயர் தீர்த்தவன்**
**திருவேங்கடம் அடைநெஞ்சமே"**

(1-8-5)

கீழ்ப்பாட்டில் அடியார்களுக்காக தூதுபோனமையும், தேரோட்டியபடியையும் கூறினார். இப்படிக் கையாளாய் (வேலைக்காரனாய்) நின்றபடியைக் கூறினார். இப்பாட்டில் அத்தோடல்லாமல், ஆச்ரிதர்களுக்காக தன்னை இரப்பாளனாக்கிய படியையும், மழுவேந்திக் கொடுத்தும் பலவிடங்களிலேயும் சமயம் பார்த்துஇருப்பவனாய், அரைக்குலையத்தலைகுலைய வந்து உதவினபடியையும் கூறுகிறார்.

மஹாபலி, இந்திரனுடைய ராஜ்யத்தைக் கொள்ளைகொள்ள அவனும் எம்பெருமானிடம் சென்று கதறியபடி, திருவுக்கும் திருவாகிய செல்வன் குறட்பிரமசாரியாய்ப் போய் யாசித்தான். மஹாபலியை ஓரம்பாலே கொன்றிருக்கலாம். ஆனாலும் அவனிடம் ஔதார்யம் (வண்மை) என்ற குணம் ஒன்றிருந்தபடியாலே அப்படிச் செய்யவில்லை. மஹாபலிக்குத் தானம் செய்வதில் அளவுகடந்த ப்ரீதி. இதையறிந்த எம்பிரான் அவன் வழியிலேயே போய், இந்திரனுக்கு இராச்சியம் பெற்றுக்கொடுத்தான். ஆச்ரிதர்களுக்காகத் தன்னை எவ்வளவு தாழவிடுகிறான் எம்பெருமான்.

(மராமரம்-இத்யாதி):- சுக்கிரீவனுக்கு நம்பிக்கையூட்டுவதற்காக ஏழு ஆச்சாமரங்களை அடித்து ஒழித்தான். பின்பு தான் ராமனுக்கு வாலியைக் கொல்லும் ஆற்றல் உள்ளது என்று அவன் நம்பினான். இப்படியல்லவா இறைவன் அடியவர்களுக்காகக் காரியஞ்செய்கிறான்.

(திண்கைமா....) கஜேந்த்ராழ்வானுக்காக ஓடிவந்து துயர் தீர்த்தான். திண்கை மா என்பது உற்று நோக்கத்தக்கது. யானை தன் திண்ணிய (பலம் பொருந்திய) துதிக்கையால் மற்ற விலங்குகளையெல்லாம் இடர்படும்படி செய்யும் திறமை வாய்ந்தது. அவனுக்கு வந்த இடர் இது என்கிறார் ஆழ்வார்.

இப்படி மேலும் ஐந்து பாசுரங்கள். அதற்கு மேல் 30 பாசுரங்கள்.

ஓரைந்து பாசுரங்களை மட்டிலும், பெரிய வாச்சான்பிள்ளை வியாக்யானத்தையும் அரும்பத உரையையும் தழுவி இவ்விடம் எழுதினேன். "ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்கிற ந்யாயத்தாலே எழுதப்பட்டது இது. இதைக்கண்ட அன்பர்கள், திருவேங்கடவனின் பெருமையையும், திருமங்கையாழ்வாரின் பெருமையையும், திருமொழியின் இனிமையையும் வ்யாக்யானத்தின் சீர்மையையும் உணர்ந்து ஓர் ஆசிரியர் மூலம் இவைகளை ஸேவித்து வாழவேண்டும் என்பதே அடியேன் குறிக்கோளாகும். இக்கட்டுரை எழுதப்பணித்த ஆசிரியருக்கு என் நன்றி உரித்தாகுக.

❋❋❋

## யுக தருமம்

தப: ப்ரம்க்ருதயுகே த்ரேதாயாம் ஜ்ஞான முக்யதே ।
த்வாபரே யஜ்ஞமே வாஹுர்தியானமேவ கலௌயுகே ॥

கிருதயுகத்தில் தவமும்,
த்ரேதாயுகத்தில் ஞானமும்,
துவாபரயுகத்தில் யாகமும்,
கலியுகத்தில் தானமும்,

முக்கியமானவையாகும்.

-ஸ்ருதி முக்தாபலம்

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

# திருமலையில் ஆதிசேஷன் வைபவம்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.



ஆதிசேஷன்
பெயர்க் காரணம் :

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் தத்துவங்கள் மூன்று. அவை சித்து, அசித்து. ஈச்வரன் என்பனவாகும். சித்தாவது அறிவுள்ள பொருள். இது பத்தர், முக்தர், நித்யர் என்று மூன்று வகையாக இருக்கும். ஒருவராலும் தடங்கலில்லாத நித்ய கைங்கர்யத்தை உடையவர்களாய், ஸம்ஸார சம்பந்த மற்றவர்களாய் பரமபதத்தில் இருப்பவர்கள் 'நித்யர்' எனப்படுகின்றனர். பிள்ளை உலகாரியரும் தத்வத்ரயத்தில் 'நித்யர் என்கிறது ஒரு நாளும் ஸம்ஸரியாத சேஷசேஷாசநாதிகளை' என்று அருளுகிறார். இதற்கு உரையிட்ட மாமுனிகள், 'அசேஷ சேஷவ்ருத்தியிலும் அந்விதனாய் கைங்கர்யபரர்க்கெல்லாம் படிமா (உபமானம்) வாயிருக்கையாலே திருவனந்தாழ்வானை சேஷன் என்கிறது' என்பர். இவனே ஆதிசேஷன் எனப்படுகிறான்.

'ஆதிசேஷ:' என்ற சொல் இரண்டு பதமாய் 'ஆதி' என்பதற்கு - 'ஆப்நோதி ஹவை ஸர்வாந் காமாந் ஆதிச்ச பவதி ய ஏவம் வேத' என்ற மாண்டுக்ய உபநிடதத்தில் "ஆதி" சப்தத்திற்கு 'ஸர்வம் ப்ரதானம்' என்று உரைகாரர் அருளியபடியே எல்லாவற்றுக்கும் பிரதானம் என்றபடி; 'சேஷ:' என்பதற்கு - 'பரகதாதிசயாதா நேச்ச யோ பாதே யத்வ மேவ யஸ்ய ஸ்வரூபம் சேஷ:' என்று வேதார்த்த சங்கிரகத்தில் இராமாநுசர் அருளியபடியே மற்றொருவனிடத்திலிருக்கும் ஒரு மகிழ்ச்சியாகிற மேன்மையை உண்டுபண்ண வேண்டும் என்னும் எண்ணத்துடன் அங்கீகரிக்கப்படுகையே எவனுக்கு ஸ்வரூபமாக இருக்கிறதோ அவன் சேஷனாவான்' என்றபடி. இவ்வாறு எல்லாவற்றுக்கும் பிரதானனான அடியவனாயிருப்பவன் ஆதிசேஷனாவான். இதுபற்றியே

"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்-என்றும்
புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு"

என்று பொய்கையாழ்வாரும், இவரை அடியொற்றியே

'நிவாஸ சய்யாஸந பாதுகாம் சுகோ பதாநவர்ஷாத பவாரணதிபி: ।
சரீரபேதைஸ் தவசேஷதாம் கதை: யதோசிதம் சேஷ இதீரிதே ஜனை: ॥

என்று ஆளவந்தாரும் ஆதிசேஷனின் பெருமையை அருளியது காண்க.

இவ்வாதிசேஷனே மலையுருவாய், அம்மலையில் திருப்புளியாழ்வாராய், கலியுகத்தில் இராமாநுசராய், அனந்தாழ்வானாய், மணவாள மாமுனிகளாய் அவதரித்துத் திருமலையில் செய்த கைங்கர்யங்கள் பலபல. அவற்றில் சிலவற்றைப் புராணச் செய்திகள் அடங்கிய திருவேங்கடமலை வரலாற்று மாலை, திருமலை ஒழுகு முதலான நூல்கள் வாயிலாக இங்கு அநுபவிப்போமாக.

திருமலைக்கு கிருதயுகத்தில் 'விருஷபாசலம்' என்

றும், த்ரேதாயுகத்தில் 'அஞ்ச னாசலம்' என்றும் துவாபரயுகத்தில் 'சேஷாசலம்' என்றும் கலியுகத்தில் 'வேங்கடாசலம்' என்னும் பெயர்கள் வழங்குவதாக பவிஷ்யோத்தர புராணத்தின் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளது.



திருமலைக்கு சேஷாசலம் என்ற பெயர்க்காரணம்

திருமலைக்கு சேஷாசலம் என்ற பெயர் வந்ததன் காரணம் பிரம்மாண்ட புராணம் இரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

ஒரு சமயம் திருப்பாற்கடலில் திருமாலை நாரத முனிவர் தரிசிக்கச் சென்றபோது பூலோகத்தில் தாம் வசிக்கத் தகுந்த இடத்தைக் கூற வேண்டும் என்று க்ஷீராப்திநாதன் கேட்டான். அதற்கு நாரதமுனிவர் பூலோகத்தில் சுவர்ண முகிரீ என்ற நதிக்கரை மிகவும் சிறந்த இடம் எனக் காட்டினார். திருமாலும் அருகிலிருந்த ஆதிசேஷனைப் பார்த்து, 'ஓ ஆதிசேஷனே! நீர் ஒருமலையாய் உருவெடுத்து அந்த இடத்தில் அமையக்கடவீர்; நாம் எல்லா பரிஜனங்களுடன் அங்கு வந்து உலாவக் கடவோம்' என்று உத்தரவு இட்டான். அவ்வாதிசேஷனும் மலையுருவாய் அமைந்து பெருமாள் உலாவுவதற்குத் தகுந்த வகையிலும் பாகவதர்கள் வசிக்கும்படியும் பல தோட்டங்களும் பல புண்ய தீர்த்தங்களும் நிரம்பப்பெற்று உயர்ந்த புண்ணிய க்ஷேத்ரமாய் விளங்கினார். மேலும் கங்கை முதலான எல்லா புண்ய தீர்த்தங்களும் தன்மேல் வந்து சேரவும், தாவர விலங்குகள் எவை வசிக்கின்றனவோ, அவை தம் தாம் விருப்பங்களை அடைந்து உய்வு பெறவும் ஆதிசேஷன் எம்பெருமானை வரம் கேட்டார். அதை அப்போதே பெருமானும் அளித்தான். எனவே, ஆதிசேஷனே இம்மலை உருவாய் அமைந்ததால் திருமலைக்கு 'சேஷாத்ரி' என்றும் 'சேஷாசலம்' என்றும் பெயர் ஏற்பட்டது. எப்போதும் இம்மலை பாம்பின் உருவமாகவே பார்ப்பதற்குக் காணப்படுகிறது. பாம்பின் தலைபாகம் சேஷாத்ரி என்றும், நடுபாகம் அகோபிலம் என்றும் வால்பாகம் ஸ்ரீசைலம் என்றும் பெரியோர் பணிப்பர்.

மலையுருவிலிருக்கும் ஆதிசேஷனின் பெருமை :

கலியுகத்தில், ஒருசமயம் வீர நரசிம்மதேவன் என்னும் ஒரு கஜபதியானவன் (கஜபதி என்பது விஜயநகர மன்னர்களுக்கு வழங்கப்படும் பட்டப்பெயர்) தீர்த்தயாத்திரையில் ஊற்றம் கொண்டவனாய் சேது தரிசனம் பண்ண நினைத்து தெற்குத் திக்கிலிருந்து புறப்பட்டு வந்தான். வழியில் ஸ்ரீவேங்கடாசலம் என்று சிறப்பாக வழங்கப்படும் திருமலையின் பெருமையைக் கேள்வியுற்று, திருமலையின் மேல் சென்று ஸ்வாமி புஷ்கரிணியில் தீர்த்தாமாடி, ஞானப்பிரானையும் வேங்கடத்தரியையும் சேவித்து, பின்னர் முறைப்படி திருவேங்கடத்தானையும் சேவித்து ஸ்வாமி திருவடிகளில் பக்தி பரவசப்பட்டு ஏதாவது கைங்கர்யம் செய்ய எண்ணி, அங்குள்ள வித்வான்களை வினவினான். அவர்களும் அணிகலன்களில் கிரீடம், வாகனங்களில் தேர், கோபுரங்களில் விமானம், இரத்தினங்களில் வைரம், சாதிகளில் பிராமண சாதி, ஆச்ரமங்களில் சந்யாஸ ஆச்ரமம் ஆகியவை உயர்ந்ததாக ஆகம சாஸ்த்ரம் கூறுகிறது என்று சொல்லி, இவன் மனதில் ருசித்ததைச் செய்யச் சொன்னார்கள். அவ்வரசனும் மகிழ்ச்சி அடைந்து ஒரு திருக்கோபுரத்தைக் கட்ட நினைத்து அதற்கான பொருள்களைக் கொடுத்து வேலையாட்களையும் ஏற்படுத்தி வேலை

யைத் தொடங்கச் செய்து மறுபடியும் தீரதத யாத்ரையாய், காஞ்சீ, ஸ்ரீரங்கம் முதலான திருத்தலங்களைச் சேவித்துக் கொண்டே சென்று சேதுவையும் தரிசித்து திரும்பிவரும் போது மறுபடியும் திருமலைக்கு வந்தான். கட்டப்பட்ட கோபுரத்தைப் பார்த்து மனநிறைவு கொண்டான். தானம் முதலிய கர்மங்களைச் செய்து அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தான். ஒருநாள் இரவு அந்த கஜபதி கனவில் உயர்ந்த பாம்பு முன்னே தோன்றி, 'வாராய் கஜபதியே! இந்தத் திருமலை என் சரீரமாய் இருக்கும், இதிலே நீ கோபுரத்தைக் கட்டுவிக்கையால் என் தேகத்தில் அதிக பாரம் உண்டாகியது. அது காரணமாக பெரும் துன்பம் உண்டாகியது. ஆகையால் என் ஸ்வாமியின் ஸந்நிதியில் போனாலல்லது என் துன்பத்தைப் போக்கிக் கொள்ள முடியாது' என்று சொல்லியது. பின்னர் அந்தப் பாம்பு கோயிலில் திருவேங்கடவன் வலது திருக்கையில் சுற்றிக் கொண்டதைக் கனவில் கண்ட அரசன் விழித்தெழுந்து அச்சம் கொண்டவனாய் பெரியோர்களிடம் இக்கனவின் கருத்து யாது? என்று கேட்டான். அவர்களும் இம்மலை வராஹவாமன புராண வசனங்களின்படியே சேஷாசலம் என்றும் இப்படி சேஷன் வடிவமான இதனை வெட்டவும் இதன்மேல் கற்களைக் குவிக்கவுமாகிற இந்த வியாபாரம் அவனுக்கு பாரமாயிருக்கும் என்றும் விடை அளித்தனர். உடனே அரசனும் கோபுரத்தை தொடர்ந்து கட்டாமல் மொட்டையாய் நிறுத்தி, திருவேங்கடவனுக்கு இவ்வளவு மாத்ரம் கைங்கர்யம் திருவுள்ளமாயிற்று என்று உகந்தான்; அதே சமயத்தில் ஆதிசேஷனிடம அபசாரப்பட்டோமே என்று பயப்பட்டு அதற்காக மலையப்பனுக்கு ஒரு நாகாபரணம் பண்ணி அணிவிக்க எண்ணினான். நாகாபரணத்தையும் பண்ணி எடுத்துவந்து சந்நிதியில் அர்ச்சகரிடம் கொடுத்து எம்பெருமானுக்கு இதனைச் சாத்தி அருள வேண்டினான். அவர்களும் இதனை எங்கே சமர்ப்பிப்பது; இது தேவதைகளுக்கு உரியதாயிற்றே என்று சந்தேகம் கொண்ட சமயத்தில் வேங்கடவன் ஒரு பக்தன் மேல் ஆவேசித்து முன்பு ஒருகால் ஆதிசேஷனுக்கும் வாயுவுக்கும் நடந்த சம்வாதத்தைச் சொல்லி 'தமக்கு இப்போது முழுமையான நட்பு உண்டானபடியாலே உலகில் தந்தையானவன் தன் பிள்ளையைக் கையாலெடுத்து. சீராட்டுவது போல் நாமும் சேஷனை கையில் தரிக்கிறோம். ஆதிசேஷனோ எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் செய்யத்தக்க கைங்கர்யங்களில் ஊற்றமுடையவன்; சிறப்பாக இத்திருமலையில் எல்லா விதமாகவும் பணிபுரிவதில் ஊக்கமுடையவன்; எனது அன்புக்கு இலக்கானவன்; ஆகையால் அவனுருவுமுடைய இந்த நாகாபரணத்தைக் கையில் சாத்துங்கள்' என்று கட்டளையிட்டார். பின்னர் எல்லோரும் வியப்படைந்து பெருமானது வலது கையில் அந்நாகாபரணத்தை அணிவித்தனர்.

**மலையுருபெற்ற ஆதிசேஷன் திருமாலைத் திருமலையில் எப்போதும் வாசம் செய்ய வேண்டுதல்:**

திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணிக்கு வடமேற்கே புண்ணியமான மலைச் சிகரத்தில் மனதுக்கு இன்பம் விளைவிக்கும் நாகதீர்த்தத்தில் எம்பெருமான் ஸ்ரீனிவாசனாகத் தோன்றுவதற்காகத் தேவதைகளின் கணக்குப்படி ஆயிரமாண்டுகள் கடும்தவம் புரிந்தான் ஆதிசேஷன். அத்தவத்தைக் கண்டு மகிழ்ந்த பகவான் நேரில் தோன்றி வேண்டியவரத்தைக் கேட்கச் சொன்னான். ஆதிசேஷனும் 'அடியேன் திறத்து தேவரீருக்குத் தயையிருக்குமாயின், வைகுந்தமாகிய உயர்ந்த உலகில் எவ்வாறு என்னுடம்பின் பொருட்டு திருக்கண் வளர்ந்தருளுகிறீரோ அப்படியே இம்மலையுருபெற்ற எனது உடலிலும் எப்போதும் வாசம் செய்தருள வேண்டும்' என வேண்டினான். இதனைக் கேட்ட எம்பெருமான் தான் விளையாடிக் களிப்பதற்குரிய நல்ல இடம் பூலோகத்தில் எங்குள்ளது என்று ஆராய்ந்து பார்த்தேன். இதற்குள் வாயுதேவனுக்கும் உனக்கும் உண்டான விவாதம் காரணமாகப் புண்ணியமான இம்மலை இங்கு வந்து சேர்ந்தது. நீயும் தவம் செய்து என்னை இங்கு வசிக்கும்படி வேண்டுகிறாய். இது எனக்கு விருப்பமான தாய் முன்பே என்னால் கோரப்பட்டதே. அப்படியே ஆகுக' என்று வரம் அளித்தார். இது பற்றியே வைகுந்தநாதன் 'பரன் சென்று சேர் திருவேங்கடமா மலை' என்கிறபடியே உயர்ந்த வைகுந்தத்தை விட்டு இம்மலைக்கு வந்து ஸ்வாமி புஷ்கரிணிக்கரையில் ஸ்ரீமகாலக்ஷ்மியுடன் கூடிக்களிக்கிறார்.

**மலையப்பனுக்கு சேஷனிடமுள்ள அன்பு :**

சேஷாசலத்தில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடவன் சேஷ

ளிடம் அன்புகொண்டு இருப்பதைத் தெரிவிக்கும் வகையில் பிரம்மோத்ஸவத்தில் முதல் நாளிரவில் மட்டுமேயன்றி இரண்டாம் நாள் காலையிலும் சேஷவாகனத்தில் புறப்பாடு கண்டருளுவது குறிப்பிடத்தக்கதாகும். பவிஷ்யோத்தர புராணப்பகுதி பதினான்காமத்தியாயத்தில் கூறப்பட்டதும் காண்க.

ஆதிசேஷன் அம்சமான திருப்புளியாழ்வார் :

ஒரு கல்ப விசேஷத்தில் திருவேங்கடமுடையான் திருவனந்தாழ்வான் அம்சமான திருப்புளியாழ்வார் கீழ்த்தோன்றினார். சிலநாள் கழித்த பின்பு ரங்கதாசன் என்பவன் தென்தேசத்திலிருந்து திருமலைக்கு வந்து, வாழ்ந்து வரும் காலத்தில் எம்பெருமானின் திருமேனிப் பரிவாலே ஒரு திருக்கோயில் கட்ட எண்ணினான். ஸ்வாமியின் பின்பு இருந்த புளியமரமானது உறங்காப்புளியாய், ஒரு கொம்பு தளிரும் ஒரு கொம்பு பழமுமாய் இப்படி விசித்திர வடிவுடையதாய் திருமேனிப் பரிவாலே குடைபிடிப்பதாற்போலே தழைத்திருந்தது. அது கண்டு என்செய்வது என்று விசாரித்து, அன்று இரவு, அந்தப் புளியமரமானது அவ்விடம் விட்டு ஸ்வாமிக்கு ஈசான்ய பாகத்தில் ஓர் அம்பு செல்லும் தூரமாக எழுந்தருளியிருக்க, ரங்கதாசன் ஆச்சரிப்பட்டு இந்த மரம் திருவனந்தாழ்வான் அம்சம் என நிச்சயித்தான். பின்னர் நந்தவனம் நியமிக்க பூகோளவராகத்திலும் ப்ராஹ்ம புராணத்திலும் இருந்தபடியே திருவேங்கடவன் 'தாங்கள் இருவர்க்கும் ஆஸ்தான ஸ்தலமாயிருக்கிற இரண்டையும் வெட்டவேண்டாம்' என நியமித்தார். இதனால் திருப்புளியாழ்வார் ஆதிசேஷன் அம்சமே என்பது வெள்ளிடைமலை.

திருமலையில் ஆதிசேஷன் அம்சமான இராமாநுசர் வைபவம் :

இவ்வுலகில் கலியின் கொடுமையால் சாதி ஆச்ரம தர்மங்கள் எல்லாம் பெரும்பாலும் அழியப்பெற்றும் திருமாலின் திருக்கோயில்கள் இடிக்கப்பெற்றும் எல்லா இடங்களில் தருமம் சிதைந்து இருக்க, கரைபுரளும் கருணையால் திருமகள் கேள்வன் தன் அந்தரங்க அடியனானவனாய் தனக்கு படுக்கையுமான ஆதிசேஷனை அழைத்து இப்புவியில் ஸ்ரீபெரும்பூதூரில் அவதரிக்கச் செய்தான். இவ்வாறு அவதரித்த ஆதிசேஷன் இராமாநுசர் என்னும் திருப்பெயர் இடப்பெற்றார்.

இராமாநுசர் திருமலைக்கு மூன்று முறை எழுந்தருளினார். திருவேங்கடமலையில் கோயில் கொண்டுள்ள தெய்வம் விஷ்ணுமூர்த்தியே என்று நிலைநாட்டிய வரலாறு தொடக்கமாக வேங்கடவனுக்குத் தொண்டு செய்ய ஜீயர் ஸ்வாமிகளையும் அவருக்கு உதவியாக ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களையும் நியமித்தது முடிவாகப் பல கைங்கர்யங்கள் செய்தது பற்றி விரிவாக வரலாற்று மாலையில் உள.

திருமலையில் ஆதிசேஷன் அம்சமான அனந்தாழ்வான் வைபவம் :

வரலாற்று மாலையில் உள்ள செய்தி பின்வருமாறு: 'பகவத் ராமாநுசராக அவதரித்த ஆதிசேஷ பகவான் ஸகல சாஸ்த்ரப் பொருள்களையும் உபதேசிப்பதிலேயே ஊக்கங் கொண்டவராய், அவற்றை உபதேசமூலமாகவேயல்லாமல் அநுட்டான மூலமாகவும் தெரிவித்து உலகோரை உய்விக்க விருப்பம் கொண்டு இவ்விரண்டு செயல்களையும் ஒரே உருவமெடுத்துச் செய்ய முடியாதென்று கருதி, ஸ்ரீபதரிகாச்ரமத்தில் நரன் நாராயணன் என்ற இரண்டு உருவம் தரித்த பகவான் போன்று தானும் இரண்டு உருவம் கொள்ள ஆசைப்பட்டு மேல் நாட்டில் காவிரிக்கரையில் சிறுபுத்தூரில் மிகச்சிறந்த பாரத்வாஜ கோத்திரத்தில் உதித்த ஸ்ரீவைஷ்ணவ குலத்தலைவரான கேசவசார்யரிடமிருந்து கலிவருஷங்கள் 4154ம் சாலிவாஹன சகவருஷங்கள் 975ம் கழிய அடுத்த விஜய வருஷத்தில் சூரியன் மேஷ ராசியில் புகுந்த போது சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் தம்முடைய அம்சமாகவே ஒருவரை அவதரிக்கச் செய்ய, அவரே அனந்தாழ்வானாக அவதரித்தார். அதற்குப் பிறகு கேசவாசார்யரால் ஆதிசேஷனைத் தாம் கனவில் கண்டதனால் தமது குமாரரின் அவதார உண்மையை ஊகித்து அதற்குத் தக்கபடி அனந்தாழ்வான் என்று பெயரிட்டார்.

திருமலை அனந்தாழ்வான் ஆதிசேஷ அம்சம் ஓர் அரிய நிகழ்ச்சி :

ஒருசமயம் அனந்தாழ்வான் ஸ்ரீராமாநுசன் என்னும் தமது தோட்டத்தில் மலர்களைப் பறித்துக் கொண்டிருந்தபோது ஒரு பாம்பு தனது கையில் கடித்தது. எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று

சொல்லி அக்கையைப் பூவால் துடைத்து விட்டு ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி கோயிலுக்குச் சென்று பெருமாளைச் சேவித்திருந்தார். சீடர்கள் விஷத்தைப் போக்க முயன்றும் அவர்களை விலக்கினார். பெருமாளும் 'விஷம் தீர்க்கும் முயற்சியிலிருந்து மீண்டது ஏன்' என்று கேட்க, ஆதிசேஷன் அம்சமாகத்தன்னை நினைத்த அனந்தாழ்வான் 'கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் நீராடிப் பாபம் நீங்கப்பெற்று பரமபதத்துக்குப் போய் தொண்டு செய்யலாம். கடியுண்ட பாம்பு வலிதாகில் இங்கேயே ஸ்வாமி புஷ்கரிணியில் ஸ்தானம் செய்து தேவரீருக்கே தொண்டு செய்யலாம். இந்த இரண்டு வகையிலும் தீங்கு ஏதுமில்லாததால் விஷம் தீர்க்க முயலாமல் வெறுமனே இருந்தேன்' என்றுராம் அனந்தாழ்வான். என்னே! ஆதிசேஷன் அம்சமான அனந்தாழ்வானின் பெருமை!

### திருமலையில் ஆதிசேஷ அம்சமான மணவாள மாமுனிகளின் வைபவம் :

ப்ரபத்தி மார்க்கமானது கலியின் கொடுமையால் வளராது போகவே, 'உறங்குவான் போல் யோகு செய்த' என்கிறபடியே உலகைக் காப்பதில் சிந்தையுடையவனாய் திருவரங்கத்தில் கண்வளரும் பெரியபெருமாள் மீண்டும் தர்சனம் இப்படி ஓராண்வழியாய் வருகிறபடியைக் கண்டு எம்பெருமானாரைப்போல லோகமெல்லாம் உய்யும்படி ஒரு விசேஷ வ்யக்தியை உண்டாக்குவோம் என்று யோசித்து இனி இதுக்கு ஆரார் என்று பார்த்து மீண்டும் ஆதிசேஷனையே கடாக்ஷித்து உலகைத் திருத்த எண்ணினார். அவரே, பெரிய பெருமாளுடைய திருவுள்ளத்தை அறிந்தவராய் தாம் திருவவதாரம் செய்ய இடம் பார்த்து ஆழ்வார் திருநகரியில் அழகிய மணவாள மாமுனிகளாக அவதரித்தார்.

இம்மாமுனிகள் திருமலைக்கு வந்த போது அங்கு மதாந்தரஸ்தரால் உபத்ரவம் வாராது இருக்க ஒரு ஜீயரை உண்டாக்க எண்ணி, தம் சீடர்களில் ஒருவரை திருவேங்கட ஜீயர் என்று திருநாமம் சாத்தி அரசனது அனுமதி பெற்று அவரை இளைய கோயில் ஜீயராக்கி தனியே திருப்பதியில் மடமும் கட்டிக் கொடுத்து பெரிய ஜீயருக்குத் துணையாக நியமித்தார். மாமுனிகளுடன் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா திருமலைக்கு எழுந்தருளிய போது அவர்தம் நியமனத்தால் அண்ணாவும் மலையப்பனுக்கு ஸுப்ரபாதம், ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களம் என்னும் நான்கு ப்ரபந்தங்களை அருளிச்செய்தார்.

இவ்வாறு திருமலையில் ஆதிசேஷனுடைய வைபவம் சிறந்து விளங்குகிறது.



## திருமலைக்கு நடந்துவரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# திருவேங்கடமுடையானின் அருள்மிகு ஏற்றம்

திரு. ஆர். கண்ணன் - சென்னை.

ஸ்ரீமந் நாராயணன், ஸர்வேச்வரனாய், ப்ரளய காலத்தில் எல்லா உலகங்களை தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்து, பின்பு காலம் வந்தவாறே, மறுபடியும் ச்ருஷ்டிக்கிறுன். ச்ருஷ்டி காலத்தில் ஜீவாத்மாக்களுக்கு சரீரம் கொடுத்து அவர்களுடைய பூர்வ-புண்ய பாபங்களுக்குத் தகுந்தவாறு கர்மாவில் ஈடுபடுத்துகிறுன். அஜ்ஞாத ஸுக்ருதங்கள் இருப்பின் ஆசார்யனை அடையச் செய்து ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்ட உதவவும் செய்கிறுன்.



அப்படிப்பட்ட ஸ்ரீமந் நாராயணன் பெருமை பெற்றிருக்கும் நிலைகள் ஐந்து என்று சாஸ்த்ரங்கள் கூறும். அவை 1) பரம் 2) வ்யூஹம் 3) விபவம் 4) ஹார்த்தம் 5) அர்ச்சை.

## பரம் :

ஸ்ரீவைகுண்டத்தில், நித்யர்களும், முக்தர்களும் நேரில் கண்டு - ஆநந்தித்து - எம்பெருமான் உகந்த கைங்கர்யங்களைச் செய்ய ஹேதுவான நிலை.

## வ்யூஹம் :

திருப்பாற்கடலில் யோகு செய்வான் போல் எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கும் நிலை. ச்ருஷ்டி செய்த உலகங்களை ரக்ஷிக்க எம்பெருமான் சிந்தனை செய்யும் இடம். (வ்யூஹம்-நான்கு என்றும் அவை வாசுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன் மற்றும் அநிருத்தன் என்றும், எம்பெருமான் ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்யும் நிலை என்றும் கூறுவார்கள்) இங்கு ப்ரம்மாதி தேவர்கள் நேரில் சென்று, எம்பெருமானிடம் தங்கள் குறைகளை விண்ணப்பித்து பரிஹாரம் காண்பார்கள்.

## விபவம் :

எப்பொழுதெல்லாம் தர்மத்திற்கு வாட்டம் ஏற்படுகிறதோ, அப்பொழுதெல்லாம் - ஸாதுக்களைக் காப்பதற்காகவும், விரோதிகளை நிரஸித்து தர்மத்தை நிலைநாட்டுவதற்காக எம்பெருமான் உலகில் திருவவதாரம் செய்வதே விபவம் எனப்படும். அவற்றில் ஸ்ரீராம, கிருஷ்ணுவதாரங்கள் சிறப்பாக நம்மால் அறியப்படுகின்றன.

## ஹார்த்தம் :

ஒவ்வொரு ஜீவாத்மாவின் ஹ்ருதயத்தில் எம்பெருமான் வீற்றிருக்கும் நிலையே ஹார்த்தம் எனப்படும். இது நம் போன்றவர்களுக்கு எளிதில் புலப்படாது. யோகிகளுக்கு நன்கு விளங்கும்.

## அர்ச்சை :

திவ்ய தேசங்களில் எம்பெருமான் ஸர்வ ஸுலபனாக, அர்ச்சக ப்ராதீனனாக, நம் ஊனக்கண்களுக்கு புலப்பட்டுக் கொண்டு தன்னை வந்து ஆச்ரயித்தவர்களுக்கு நன்மையை அருள் புரிந்து கொண்டு இருக்கும் நிலையே அர்ச்சை எனப்படும்.

பரம் என்ற நிலை ஆவரண ஜலம் போல், நம் போன்ற ஜீவர்களுக்கு கிட்டாதது. வ்யூஹமோ, திருப்பாற்கடல் போன்று, ப்ரம்மாதி தேவர்களுக்கு மட்டும் கிட்டவல்லது. விபவம் மழை பெய்

யும் காலத்தில் உதவும் காட்டாறு போல் அவதார காலங்களில் உள்ளவர்களுக்கே பயன் அளிக்கவல்லது. ஹார்த்தமே பூமிக்கு அடியில் ஆழமான ப்ரதேசத்தில் உள்ள நீர் அதை வெளிக்கொணர சக்தியுள்ளவர்களுக்குப் பயன்படுவதுபோல் யோகிகளுக்கே உணர முடியும். அர்ச்சாவதாரமோ, மடுவில் தேங்கியுள்ள நீர்போல், நம்மால் ஸுலபமாக அடைந்து பயன் அடையமுடியும். ஆகவே அர்ச்சைக்கு ஏற்றம் அதிகம்.

இப்படி எம்பெருமான் அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்கள் முக்கியமாக 108 என்று பெரியோர்கள் கணக்கிட்டிருக்கிறுர்கள். அவைகளுள் திருப்பரமபதம் மற்றும் திருப்பாற்கடல் இரண்டும் இந்த பூலோகத்தில் இல்லை. மற்றைய 106 திவ்ய தேசங்களில் மூன்று சிறப்பான பெருமை பெற்றது. அவைகளை கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று போற்றுவார்கள். கோயிலாவது, பெரியபெருமாள் எனப்படும் திருவரங்கன் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கம். திருமலையாவது ஏழுமலைகளுக்கு நடுவே ஸ்ரீநிவாஸன் நித்யவாஸம் செய்யும் திருவேங்கடம் என்னும் திருப்பதியே. பெருமாள் கோயில் என்பது, பேரருளாளன் என்னும் வரதராஜன் ஆச்ரிதர்களுக்கு நித்யமும் அருள் செய்யுமிடமான காஞ்சிபுரம். இவை மூன்றினுள்ளும் இன்று பல்லாயிரக்கணக்கான அடியார்கள், பெரியோர்-சிறியோர், தனவந்தர்-ஏழை, ஆண்-பெண் என்று பாகுபாடின்றி நித்யமும், எம்பெருமானை இறைஞ்சுமிடம் திருவேங்கடமே.



திருவேங்கடத்தில் நித்யவாஸம் செய்யும் எம்பெருமான் ஸ்ரீநிவாஸன் (ஸ்ரீதேவிக்கு (பெரியபிராட்டிக்கு) இருப்பிடம்) ஸ்ரீவேங்கடாசலபதி என்று போற்றப்பெறும் எம்பெருமான்-ஸ்ரீதேவி ஒரு க்ஷணமும் கூட பிரியாது எம்பெருமான் திருமார்பிலே வீற்றிருந்து, எம்பெருமான் உடன் கூட அடியார்களுக்கு அருள் புரிந்து வருகிறுர். நம்மாழ்வாரும் "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா" என்று எம்பெருமானைச் சிறப்புறச் செய்கிறுர்.

தன்னை வந்து ஸேவிக்கும் பக்தர்களுக்கு எல்லாவித நன்மைகளையும் அருள்புரிபவன் ஸ்ரீவேங்கடநாதன் "வேங்கடம்" என்றுலே, பாபங்களை நாசம் (அழிய) செய்பவன் ஆகவே இவ்வெம்பெருமானை அண்டி, "புகல் ஒன்றில்லேன் - உன் அடிக்கீழ் புகுந்தேனே" என்று சரண் அடைந்தால் நம் பாபங்களை எல்லாம் அழித்து ஸகலவித ஐஸ்வர்யங்கள் மட்டுமல்லாமல் மோக்ஷத்தையே அளிக்க வல்லவன். அவன் வீற்றிருக்கும் திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே" என்று மலையே நம் பாபங்களை ஒழிக்க வல்லதாக இருக்கும்போது ஸர்வசக்தனான எபெருமான் நம் பாபங்களை அழிப்பதில் என்ன ஆச்சர்யம். இந்த திவ்ய தேசத்திற்கு ஏற்றம், ஆழ்வார்களும், ஆசார்யர்களும், இங்கு மண்டிக்கிடந்ததுதான். பூலோக வைகுண்டமாகிய திருவரங்கத்திற்கு அடுத்தபடியாக அதிகமான ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட பெருமை திருவேங்கடத்திற்கு உண்டு - நம்மாழ்வார் "புகல் ஒன்றில்லேன், உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்று சரணுகதி செய்தது திருவேங்கடவன் திருவடியிலே, திவ்ய ப்ரபந்தத்தைத் தோற்றுவித்த முதல் ஆழ்வார்கள் மூவரும் அதிகமாக மங்களாசாசனம் செய்தது திருவேங்கடத் திருப்பதியைத்தான். "திருமலையில் ஏதேனுமாவேனே", என்று குலசேகராழ்வார் ப்ரார்த்தித்ததும் இங்குதான். நாச்சியார் கோதைப் பிராட்டி மேகத்தை தூதுவிட்டது இந்த திவ்ய தேசத்து எம்பெருமானைக் குறித்துத்தான். திருமங்கையாழ்வாரும், திருமழிசைப்பிரானும், பெரியாழ்வாரும் திருவேங்கடத்தான் ஸௌலப்யத்திலும், ஸௌசீல்யத்திலும் ஈடுபட்டு சிறப்பு கவி பாடினார்கள் என்றுல் மிகையாகாது. திருப்பாணுழ்வாரும், அரங்கனைப் பாடும் போதும், "மந்திபாய் வடவேங்கடம்" என்று இந்த திவ்ய தேசத்தை அநுஸந்திக்கிறுர்.

ஆசார்ய ச்ரேஷ்டர்களுள், பெரிய திருமலைநம்பிகள், ஸ்வாமி ராமாநுஜர், மற்றும் ஸ்வாமி தேசிகன் முதலானவர்கள் இவ்வெம்பெருமானிடம்

அதிகம் ஈடுபாடு கொண்டவர்கள். இந்த திவ்ய தேசத்திலன்றோ, பெரிய திருமலைநம்பிகள் ஸ்வாமி ராமானுசருக்கு ஒரு வருஷகாலம் ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபம் ஸாதித்தார். ஸ்வாமி ராமானுஜரும் திருவேங்கடத்து எம்பெருமானான ஸ்ரீநிவாஸனுக்கு மங்கள ஸ்லோகம் ஸமர்ப்பித்துவிட்டு, தன் மிகப்பெரிய சிறப்புமிக்க ஸ்ரீபாஷ்யத்தை இயற்றினார். ஸ்வாமி தேசிகன், அதிவிலக்ஷணமாக, ஸ்ரீவேங்கடநாதனின் தயைக்கு நூற்றியெட்டு ஸ்லோகமிட்டு, "தயா சதகம்" அருளிச்செய்தார். மற்றைய ஆசார்யர்களும் இங்கு ஈடுபட்டு, எம்பெருமானை அநுபவித்து மகிழ்ந்தார்கள்.

துவாபரயுகத்தில் ஸ்ரீகிருஷ்ண்னாக அவதரித்த ஸ்ரீமந்நாராயணனே, "கலௌ வேங்கடநாயக:" என்னும்படி கலியுகத்தில் வேங்கட கிருஷ்ணனாக திருமலையில் ஸேவை ஸாதிக்கிறான். வலது திருக்கை, திருவடியை காட்டிய வண்ணமும், இடது திருக்கை, முழங்கால் அளவு மடிந்த நிலையில் இருப்பது ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்ரீமத் பகவத்கீதையை நினைவு படுத்துகிறதல்லவா! "எவன் ஒருவன் என்னுடைய திருவடியை அடைகிறானோ, அவனுக்கு ஸம்ஸார ஸாகரம் முழங்கால் அளவு ஆகிறது. அதனால் அவனை ஸம்ஸார ஸாகரத்தை தாண்டுவித்து, ஸ்ரீவைகுண்டத்தை அடைவிப்பேன் என்று உறுதி கூறுவதாக அமைந்துவிட்டது அல்லவா! திருவிடவெந்தை என்னும் ஒரு திவ்ய தேசம் உண்டு. அங்குள்ள எம்பெருமானுக்கு "ஸ்ரீநித்ய கல்யாண ஸ்வாமி" என்ற திருநாமம். அங்கு நித்ய கல்யாணம் (தினந்தோறும் கல்யாண உத்ஸவம்) நடந்தேற வாய்ப்பில்லாவிட்டாலும் திருமலையில் தினந்தோறும் கல்யாண உத்ஸவம் நடைபெற்று ஆயிரக்கணக்கானோர் பங்குபெறுவதைக் காண்கிறோம். நாள் தோறும் ப்ரம்மோத்ஸவம், ஊஞ்சல் உத்ஸவம் கண்டருளுவதையும் நாம் பார்க்கிறோம். ஒவ்வொரு உத்ஸவமும் நியதிப்படி நன்கு நடைபெறுவது எம்பெருமானின் பெருமையை பறை சாற்றுகிறதல்லவா! "வேண்டுதலை செலுத்த வேறு இடம் இல்லை" என்பதை பறை சாற்றுவது போல், ஆயிரக்கணக்கான பேர்கள் தங்கள் வேண்டுதலை, காணிக்கைகளை செலுத்துவதையும், பார்த்து அநுபவிக்கிறோம். முடி (தலைமுடி) காணிக்கை முதல், முடி (கிரீடம்) காணிக்கை வரை செலுத்தப்படுவது எம்பெருமானின் பெறுமையை உயர்த்துகிறது.

எம்பெருமானின் இவ்வளவு ஏற்றத்திற்கும் காரணம் என்ன? "அவனிடமுள்ள சிறந்த குண்மான தயையே காரணம்" என்கிறார் ஸ்வாமி தேசிகன்.

எம்பெருமானிடம் தயை என்னும் குணம் மட்டும் இல்லாமலிருந்தால் - அவனுடைய மற்றைய குணங்களான ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ், ஆகியவைகள் அவனுக்கு நன்மை செய்ய இடமாகாமல், தோஷங்களாகவே ஆகியிருக்கக்கூடும் என்று ஸாதிக்கிறார் ஸ்வாமி தேசிகன்.

"வ்ருஷகிரி க்ருஹமேதி குண:
போதபலைச்வர்ய வீர்ய
சக்திமுகா: |
தோஷா பவேயு ரேதே
யதி நாம தயே த்வயா
விநாபூதா ||

திருமலையப்பனின் குணங்களின் தலைவி தயையென்னும் குணம்தான் என்று "வ்ருஷகிரீச குணேச்வரீம் த்வாம்" என்று ஸ்வாமி தேசிகன் மேலும் குறிப்பிடுகிறார்.

உலகமுண்ட பெருவாயனான திருவேங்கடத்தானுக்கு நாம் சமர்ப்பிக்கும் பாபங்களாகிற ஆகாரத்தை ஜீர்ணம் செய்ய முடியாது? எல்லாவற்றையும் "வாரிவழுங்கிவிட்டு இன்னும் திருப்தியடையவில்லை என்று கூறுவான் போலும்" என்று ஸ்வாமி தேசிகன் தயா சதகத்தில் ஸாதிப்பது வெகு அத்புதம்.

தயையை, திருவேங்கடமுடையானுடைய ஒரு தேவியாக உருவகப்படுத்தி, அவளுடைய புருஷகாரத்தினாலேயே எம்பெருமான், சென்று அவன் திருவடிகளை வணங்குவார்களுக்கு, ஐச்வர்யம் முதல் மோக்ஷம் வரை எல்லாவித பலன்களையும் அளிக்கின்றார் என்பது ஸ்வாமி தேசிகனின் தயாசதகச்சுருக்கு. ஸர்வவிதத்திலும் ஏற்றமுடைய திருவேங்கடநாதனின் திருவடியை சரணாக அடைவோம். இந்த பூலோகத்தில் சுகம் அடைவது மற்றுமன்றி மோக்ஷ சாம்ராஜ்யத்தையும் அடையப்பெறுவோம்.

திருவேங்கடநாதனின் திருவடிகளே சரணம்.



# திருவேங்கடமுடையானும் தொண்டைமான் சக்ரவர்த்தியும்

திரு. கே.எ. பார்த்தசாரதி - சென்னை.

திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருவேங்கடத்தந்தாதியில் ஒரு பாசுரப்பகுதி: "மாலாகி பள்ளி கொள்ளாமல் சங்கோடு அணி ஆழி நீங்கி நின்றான் வேங்கடேசனை ஆதரித்தே" என்று அமைந்திருக்கிறது. திருமால் தம் இருப்பிடமான பரமபதத்தில் திருஅனந்தாழ்வான் மீது பள்ளி. கொண்டிருக்கும் நிலையை தவிர்த்து இந்த பூமண்டலத்தில் திருவேங்கடமுடையானாக அவதரித்த சரித்திரம் குறிப்பிடப்படுகிறது. ஆனால் "சங்கோடு அணி ஆழிநீங்கி நின்றான்" என்ற தொடர் எவ்வாறு பொருந்தும் என்பது விளங்காத நிலையில் இந்த எம்பெருமானுடைய ஸ்தல புராணங்களை ஊன்றி பார்க்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. இந்த எம்பெருமான் தொண்டைமான் சக்கரவர்த்திக்கு அருள் செய்ததாக பல குறிப்புகள் ஸ்தல புராணங்கள், வெங்கடேச இதிகாசமாலா, கோயில் ஒழுகு, மற்றும் ஆழ்வார் பாசுரம் மூலமாக நமக்கு தெரியவருகிறது. இந்த சக்ரவர்த்தியின் காலத்தை நிர்ணயிக்க முற்பட்டால் அது புராணங்களிலேயே பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அந்த புராண அடிப்படையிலேயே ஆழ்வார் பாசுரம் மற்றும் இதர நூல்கள் அமைந்திருக்கக்கூடும். இவ்வாறு பரந்து



கிடக்கும் தொண்டைமான் சககரவர்த்தியினுடைய சரித்திரத்தையும் மற்றும் திருவேங்கடமுடையான் அவருக்கு அருளிய விஷயங்களை ஒரு கோர்வையாக அனுபவிக்கலாம்.

திருமங்கையாழ்வார் அருளிச் செய்த "ஏழை, ஏதலன்" என்ற பதிகத்தில் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அருள் செய்ததாக ஒரு பாசுரம்:

"துளங்கு நீண்முடியரசர் தங்குரிசில்
தொண்டைமன்னவன் திண்டிற
லொருவற்கு
உளங்கொளன்பினொடு இன்னருள்
சுரந்து
அங்கோடு நாழிகையேழுடனிருப்ப
வளங்கொள் மந்திரம்
மற்றவற்கருளிச்
செய்தவாறு அடியேனறிந்து-உலக
மளந்த பொன்னடியே
யடைந்துய்ந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே"

இந்த பாசுரத்தில் திருவேங்கடமுடையான் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு "பெரிய திருமந்திரத்தையும்" அதன் ஆழ்பொருள்களையும் உபதேசித்த சரித்திரம் தெரிவிக்கப்படுகிறது.

தொண்டைமான் சகரவர்த்தி திருவேங்கடமுடையானிடம் பூரண பக்தி கொண்டவன் அந்த பக்தியை உகந்து அவனிடம் ஏற்பட்ட சந்தோஷத்தால் மனம் உகந்து அவனுக்கு "திரு அஷ்டாக்ஷர" மகா மந்திரத்தையும் அதில் அடங்கி இருக்கும் அருமையான அர்த்தங்களை



யும் மற்றும் பல நல்லவிஷயங்களையும் அருளிச்செய்தான் திருவேங்கடமுடையான். இந்த பாசுரத்தில் "வளங்கொள் மந்திரம்" என்பது "நமோ நாராயணயேதி மந்த்ர ஸர்வார்த்த ஸாதந:" என்று தெரிவிக்கப்படும். இந்த பாசுர வியாக்யானத்தில் "எல்லா பலன்களையும் அளிக்கவல்ல ஔதார்யம் பொருந்திய திருமந்திரம் "ஸர்வம் அஷ்டாக்ஷரான் தஸஸ்த்தம்" என்கிறபடியே எல்லாப் பொருள்களையும் தரவல்ல தன் உள்ளே அடக்கியிருக்கும் திருமந்திரம் எனப்பட்டது. இந்த திருமந்திரத்தின் உட்பொருளை பூரணமாக உபதேசம் பெற்றால் அதனால் ஏற்படக்கூடிய ஏழு அர்த்தங்களாவன:

1) தேஹமே ஆத்மா என்ற பிரமை நீங்குதல்
2) தான் ஸ்வதந்திரன் என்ற கொள்கை நீங்குதல்.
3) தேவதாந்தரங்களுக்கு தான் அடியவாராகாமை.
4) பேற்றின் பொருட்டு தன் முயற்சி தவிர்த்தல்.
5) உறவினர் அல்லாதாரை உறவினராக கொள்ளாமை.
6) ஐம்புலன் ஆசை ஒழித்தல.
7) பாகவத சேஷத்வம்.

இவையே திருவஷ்டாக்ஷர மந்திர உபதேசத்தில் ஏற்படக்கூடிய பகவானுடைய அருள். ஆழ்வார் "வளம் கொள் மந்திரம்" என்று தெரிவிப்பதும் இந்த மந்திரத்தையே. தொண்டைமான் பெற்ற அருள் இதுவே.

"ஸ்ரீவேங்கடேச இதிஹாஸ மாலா" என்ற நூல் மூலமாக தெரிவிக்கப்படும் மற்று மோர் சரித்திரம்.

தொண்டைமான் சக்கரவர்த்தி திருவேங்கடமுடையான் விஷயமாக பரமபக்தி கொண்டவன். அந்த பகவானுடைய திருவடிகளில் கைங்கர்யம் செய்வதே முக்கியமாகக் கொண்டவன். அதனால் அவனுடைய அரசாட்சியில் நாட்டிற்கு செய்யவேண்டிய கடமைகளில் குறைபாடு தோன்றத் தொடங்கியது. மன்னவன் பகவானுடைய தொண்டில் ஈடுபட்டிருந்த சமயம் பகைவர்கள் பெரும்படையோடு அவருடைய நாட்டின் மீது தாக்குதல் செய்ய முற்பட்டனர். சக்ரவர்த்தி பகவானை சரணமடைந்தார். பகவானும் நீ அஞ்ச வேண்டாம் என்று அபயமளித்து தனது கையில் தரித்திருந்த சங்கு, சக்கரம் ஆகிய ஆயுதங்களை கொடுத்து இதனைக் கொண்டு பகைவர்களை அழித்து வரும்படி அனுப்பினார். பகவானுடைய ஆயுதங்களை துணை கொண்டு பகைவரை அழித்தான். சக்ரவர்த்தி அந்த ஆயுதங்களை மீண்டும் பகவானிடம் திருப்பி அளித்து விட்டான். அப்பொழுது சக்ரவர்த்தி பகவானிடம் பிரார்த்தித்தது - "எம்பெருமானே! அடியேனுக்கு ஆயுதங்களை அளித்தது உலகத்தில் பிரஸித்தமாவதற்காக தேவரீருடைய இந்த அர்ச்சா விக்கிரஹமான திருமேனியில் சங்கு சக்கரங்களை ஏந்தாமல் இருக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். அந்த பிரார்த்தனைக்கு இசைந்து பெருமாள் பிறகு அந்த ஆயுதங்களை தரிக்கவில்லை. இதுவே காரணமாக திருவேங்கடமுடையான் சிலகாலம் தன் திருக்கையில் சங்கு சக்கரங்களை தரிக்கவில்லை. இந்த சரித்திரத்தை புராணம் தெரிவித்தபடி பின்னைப் பெருமாள் ஐயங்கார் தமது பாசுரத்தில் "சங்கோடு அணி ஆழி நீங்கி நின்றான் வெங்கடேசன்" என்று தெரிவிக்கிறார்.

இந்த சரித்திரத்தின் அடிப்படையில் திருவேங்கடமுடையான் பலகாலம் சங்கு சக்கரங்களை கையில் தரியாமல் காட்சியளித்து வந்தான். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு சைவர்கள் அந்த எம்பெருமானை சிவப்பிரானாகவும்,

முருகனாகவும் மற்றும் துர்க்கையாகவும் தம்மனம் போனபடி பிரசாரம் செய்யத்தொடங்கினர்.

ஸ்ரீராமாநுசருடைய சரித்திரத்தில் அவர் மூன்றுமுறை திருமலைக்கு சென்றதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. முதன் முறை பெரிய திருமலை நம்பிகளிடம் ஸ்ரீராமாயண அர்த்தவிசேஷங்களை கேட்பதற்காக சென்றார் என்பது. அந்த சமயம் அவர் மலைமீது கால் இட்டு ஏறுவது அபசாரம் என்று கொண்டு மலை ஏறவில்லை. மலையடி வாரத்திலேயே அவர் பெரிய திருமலை நம்பிகளுடன் ராமாயணம் கேட்டதாக சரித்திரம்.

அவர் இரண்டாவது முறை திருமலைக்கு சென்ற விஷயத்தை "கோயில் ஒழுகு" என்ற நூல் விவரிக்கிறது. "திருவேங்கடமுடையான் தன் பக்தரான தொண்டைமான் சக்ரவர்த்திக்கு உதவி செய்ய தன் சங்கு சக்கரங்களை அளித்ததாகவும் அதனால் பெருமாள் சில காலம் சங்கு சக்கரங்களை தரிக்காமல் இருந்தார் என்ற புராணத்தை தழுவியது. ஸ்ரீராமாநுசர் காலத்தில் சங்கு சக்கரங்கள் மீண்டும் சமர்ப்பிக்கப்பட்டதாக சரித்திரம். ராமாநுசர் காலத்தில் தான் ஏன் இந்த நிகழ்ச்சி ஏற்பட வேண்டும் என்பதற்கு சமாதானமாக அந்த காலத்தில் தான் சைவ பற்றுடையவனான அரசன் கோயில் அர்ச்சகர்களை துன்புறுத்திவந்ததாகவும், அதனால் வேங்கடவனுக்கு பூஜைகள் சரிவர நடைபெறாமல் தடைபட்டது. சைவர்கள் திருவேங்கடமுடையானை தங்களது இஷ்ட தெய்வமான சுப்ரமண்யர் என்று பிரசாரம் செய்யத் தொடங்கினர். அப்பொழுது ஏற்பட்ட சைவ வைணவ வாதங்களில் பங்கு கொண்ட ராமாநுஜர் புதிதாக சங்கு சக்ரங்களை வேங்கடவனுக்கு சமர்ப்பித்தார் என்று கூறப்படுகிறது. இந்த நிகழ்ச்சியில் மிகவும் விஸ்தாரமாக "ஸ்ரீவெங்கடேச இதிஹாஸ மாலா" என்ற வடமொழி நூல் மூலமாக தெரியவருகிறது. பிற்காலத்தில் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட "History of Tirupati" என்ற நூலிலும் காணலாம்.

தொண்டைமான் சக்ரவர்த்திக்கு "திருஅஷ்டாக்ஷர மந்திர உபதேசம்" மற்றும் சங்கு சக்கரங்களை அளித்து பகைவர்களை வெற்றி கொண்டது இது போல் மற்றுமோர் சரித்திரமும் தெரிவிக்கப்படுகிறது. அதனையும் சுருக்கி தெரிவிக்கிறேன்.

திருமலைக்கு சமீபத்தில் குரவை என்ற கிராமம் மண்பாண்டம் செயது விற்று ஜீவனம் செய்துவரும் ஏழ்மையான ஜீவனம் நடத்தி வருபவன். அவன் திருவேங்கடமுடையான் விஷயத்தில் பரம பக்தன். தான் தினமும் மண்பாண்டம் செய்து முடித்து கடைசியாக தன் கையில் ஒட்டி இருக்கும் மண்ணைக் கொண்டு வழித்து அதனை நான்கு புஷ்பங்களாக செய்து திருவேங்கடமுடையானை மனதில் தியானித்து அந்த மண்ணால் ஆன புஷ்பங்களை சமர்ப்பித்து வந்தான்.

அதேசமயம் தொண்டைமான் சக்ரவர்த்தி தனது பக்தியின் காரணமாக பொன்னால் ஆன புஷ்பங்களை பகவானுடைய திருவடிகளில் சமர்ப்பித்து வந்தான். பொன்னால் ஆன புஷ்பங்களுடன் மண்ணால் ஆன புஷ்பங்களும் பகவானுடைய திருவடிகளில் காணப்பட்டது. இந்த விருத்தாந்தத்தை அர்ச்சகர் மூலமாக சக்ரவர்த்தி தெரிந்து கொண்டான். மண்ணால் ஆன புஷ்பங்களையும் பகவான் உகந்து ஏற்றுக்கொண்டான் என்பதை கேள்விப்பட்ட சக்ரவர்த்தி அந்த பக்தன் யார் என்பதை தான் நேராக காண வேண்டும் என்று ஆசைபட்டான். அதே சமயம் அந்த பக்தன் யார் என்று வெளிப்படையாக தெரிந்து விட்டால் தான் தனது உயிரை மாய்த்துக் கொள்வேன் என்று சபதமும் செய்திருக்கிறான். பகவானுக்கு இந்த சபதமும் தெரியும். அந்த பக்தனுடைய காலம் முடியும் நேரம் நெருங்கி விட்டது. என்பதை அறிந்த

## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத்தொகையினை தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' D.D. அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸதானம், திருப்பதி.

பகவான் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அந்த பக்தன் இருக்கும் இடத்தை தெரிவித்தார். "நீர் ஒருவர் மட்டுமே சென்று அந்த பக்தனை காண வேண்டும்" என்று கட்டளையிட்டார். சக்ரவர்த்தியும் அந்த பக்தனை நேரில் கண்டார். பகவானுடைய நியமனம் பெற்றே சக்ரவர்த்தி தன்னை சந்தித்தார் என்பதை அறிந்த பக்தன் இதற்கு மேலும் தான் ஜீவித்து இருக்கக்கூடாது என்று தன்கையில் கொண்டிருந்த தட்டுமத்தாலே தன் தலையில் அடித்துகொண்டு உயிரை மாய்த்துக் கொண்டான் என்பது சரித்திரம். இந்த பக்தனுடைய பெயர் குறும்பு அறுத்த நம்பி என்பது.

இந்த சரித்திரமும் திருமங்கையாழ்வார் பாசுர வியாக்யானம். அழகியமணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த "ஆசார்ய ஹ்ருதயம்" மற்றும் 'திருமலை ஒழுகு' முதலான நூல்கள் மூலம் நமக்கு தெரியவருகின்றது.

மேலே தெரிவித்தபடி மூன்று சரித்திரங்கள் ,மூலமாக திருவேங்கடமுடையான் தொண்டைமான் சக்ரவர்த்திக்கு அருள் செய்ததாக நூல்களை ஆதாரமாகக்கொண்டு தெரிவிக்கப்பட்டது.

"கலௌவேங்கடநாயக:" என்றபடி இந்த கலியுகத்தில் பக்தர்களுடைய பிராத்த்தனைகளை ஏற்று அவனுடைய பூரண கடாக்ஷத்திற்கு பாத்திரமாகவேண்டும் என்று தெரிவித்து பூர்த்தி செய்கிறேன்.

திருவேங்கடமுடையான்
திருவடிகளே சரணம்.



# ஆனந்த நிலைய இறைவனவன்

திரு. உ.ப.வே.பி.எம். ஸத்யராம் - சேலம்.

வேத நாயகன் திருப்பாதம் போற்றுவோம்
வேங்கட தலைவன் புகழ் பாடுவோம்
அழகிய அலர்மேல்மங்கை நாதனவன்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)

ஞாலம் புகழும் நாராயணன்
நாமம் பாடிட நலனுமுண்டு
அச்சுதன் கோவிந்தன் - அருள்புரியும்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)

கயலுமாகி ஆமையாகி - அன்று
கோல வராகமாகி புவி காத்தனன்
நரனும் சிங்கமுமான புருஷோத்தமன்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)

குறளுருவாகி நிலம் அளந்தவன்
பரசுதனை ஏந்திய பார்க்கவன்
வேள்வி காத்த முன்னவ்ன் மூத்தவன்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)

ஐவர்க்கு தூது சென்றவன் - தர்ம
அறிவுதரு அழகிய பரிமுக பரந்தாமன்
ஹம்ஸ அம்சமான வியாச கௌதமன்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)

பலவித உருகொண்ட பரம்பொருள் - அருள்
ஸ்ரீநிவாஸன் திருமலை தலைவன் ஸ்ரீதரன்
நலம் பல தரும் ஆயிரம் நாமமுடைய தலைவன்
ஆனந்த நிலைய இறைவனவன். (வேத நாயகன்)



# திருவேங்கடமலை

திரு. வி.என். கோபால தேசிகாசாரியர் - திருநாகேஸ்வரம்.

"ச்ரோணு நக்ஷத்ரம் விஷ்ணு:" (திருவோணம் விஷ்ணுவுடைய நக்ஷத்ரம்) என்று வேதங்கள் சொல்கின்றன. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், தீயவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலை நாட்டுவதற்காகவும், எம்பெருமான் பல அவதாரங்கள் எடுக்கிறுன்.

இந்த அவதாரங்கள் பல்வேறு நக்ஷத்ரங்களில் ஏற்படுகின்றன. நரசிங்கனுடைய அவதாரம் ஸ்வாதியில்; ராமனுடைய நக்ஷத்ரம் புனர்வஸு; கண்ணனுடைய அவதாரம் ரோஹிணியில். ஆயினும், பெருமானுடைய நக்ஷத்ரம் திருவோணம் ஆதலால், அவதாரங்களும் திருவோண நக்ஷத்ரத்தில் என்றே பாடுகின்றனர் ஆழ்வார்கள். "திருவோணத்திரு விழ வில் அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவன்" (நரசிங்கன்: பெரியாழ்வார் திருமொழி 1-1-6); "திருவோணத்தான் உலகாளும்" (கண்ணன்), "நீ பிறந்த திருவோணம் இன்று" (கண்ணன்), (பெரியாழ்வார் திருமொழி 1-2-3; 2-4-2) என்று பெரியாழ்வார் பாடுகின்ருர்.

அர்ச்சாவதாரத்திலும், எம்பெருமான் பல்வேறு நக்ஷத்ரங்களில் அவதரிக்கிறுன். ஸ்ரீரங்கநாதனுடைய நக்ஷத்ரம் ரேவதி. காஞ்சி வரதனுடைய நக்ஷத்ரம் ஹஸ்தம். ஆனால், திருவேங்கடமுடையானுடைய பெருமைக்கு ஏற்றபடி, அவனுடைய திருநக்ஷத்ரம் திருவோணமாகவே அமைகின்றது. "திருவோணத்தான் உலகாளும்" என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடி, திருவேங்கடநாதன் உலகத்தை ஆள்கின்ருன்.



திருமலையப்பனுடைய பெருமையைப் பற்றிப் பேசவும் முடியுமோ? இங்கு ஸ்வாமிதேசிகன் அருளிச்செய்த ஓர் அற்புதமான விவரணம் நினைவுக்கு வருகின்றது. ஆகாயம் முழுவதும் காகிதமாகவும், ஏழுகடல்களும் மையாகவும், எம்பெருமானே சொல்பவனாகவும் இருந்தாலும், ரங்கநாதனுடைய பாதுகைகளின் பெருமையை எழுதுவது கஷ்டம் என்கிருர் (பாதுகாஸஹஸ்ரம்-32) இது திருவேங்கடமுடையானுக்கும் முழுமையாகப் பொருந்தும்.

ஆழ்வார்களுள் மிக அதிகமான திவ்யதேசங்களை ஸேவித்துப் பாடியவர் திருமங்கை மன்னன் "தான் உகந்த ஊரெல்லாம் தன் தாள்பாடி" (திருநெடுந்தாண்டகம் -6) என்றபடி, 108 திருப்பதிகளில் 86-ஐப் பாடியருளினார் கலியன். ஆகிலும் ஆசார்யவள்ளலான ஸ்வாமி தேசிகன், திருமங்கையாழ்வார் தம் ஆறு ப்ரபந்தங்களிலும் திருவேங்கடவனையே பாடியருளினார் என்று கூறுகின்ருர். தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி- "பரகாலன் சொல் அத்தன் உயர் வேங்கடமாற்கு ஆயிரத்தோடான இருநூற்றேரைம்பதது மூன்று" (ப்ரபந்த சாரம்- 16).

எண்பத்தாறு திருப்பதிகளைப் பாடிய கலியன், திருவேங்கடமுடையானையே முழுவதுமாகப் பாடினார் என்று இப்படி தேசிகன் அருளிச்செய்ததற்குக் காரணம் யாது? எந்தத் திருப்பதியை ஸேவித்தாலும் அங்கும் வேங்கடவனைக் காணுகின்றார் கலியன்.

திருவரங்கனைப் பாட ஆரம்பித்து, அங்கும் வேங்கடவனையே முதலில் காண்கிறார். பிறகு தான் அரங்கன் வருகிறான். (வெருவாதாள் வாய் வெருவி வேங்கடமே வேங்கடமே என்கின்றாளால் - பெரியதிருமொழி -5-5-1; பிரியாது வந்து எனது மனத்து இருந்த வடமலையை... யான் கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே - பெரிய திருமொழி - 5-6-7)

திருநறையூரிலும் (நாச்சியார் கோவில்) திருவேங்கடத்தானைக்காண்கிறார். (திருவேங்கடத்தானை... நறையூரில் கண்டேனே - பெரிய திருமொழி-6-8-1; வேங்கடத்தரியை... அன்றி என் மனம் சிந்தை செய்யாதே - பெரிய திருமொழி-7-3-5).

திருக்கண்ணபுரத்தில்சௌரிப் பெருமாளை ஸேவிக்கும் போதும், வேங்கடவன்தான் முன்னால் வந்து நிற்கின்றான். (அருவிசோர் வேங்கடம் நீர்மலை என்று வாய் வெருவினாள் - பெரிய திருமொழி-8-2-3; வடவரை நின்றும் வந்து இன்று கணபுரம் - பெரிய திருமொழி-8-2-6.)

இன்னும் தெற்குத் திருமலையான அழகர்கோவில், திருவெள்ளறை, திருக்கண்ணமங்கை, திருநாங்கூர்த்திருப்பதிகள், திருவல்லவாழ் முதலிய திருப்பதிகளை



ஆழ்வார் ஸேவிக்கும் போதெல்லாம் வேங்கடவனே வந்து நிற்கிறான். இப்படி, எங்கெங்கும் கலியன் வேங்கடவனை ஸேவித்துப்பாடியதால் தான், தேசிகன் கலியனுடைய பாசுரங்கள் எல்லாமே திருவேங்கடவனைப் பற்றியவை என்கிறார்.

இப்படிப்பட்ட திருவேங்கடநாதனுடைய பெருமைக்குச் சற்றும் சளைத்ததல்ல திருவேங்கடமலையினுடைய பெருமை. வேத வெற்பு (வெற்பு-மலை) என்று இதனை அழைக்கிறார் தேசிகன். வேதங்களே திருமலையாக வடிவெடுத்தன என்கிறார். வேதங்கள் போற்றுகின்ற மலை என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம். ருக் வேதம் கூறுகின்றது. அராயி காணே விகடே கிரிம் கச்ச - என்று (செல்வத்தை இழந்தவளே, கண்ணை இழந்தவளே, பாபங்களைச் செய்தவளே, மலையை அடைவாயாக).

மீண்டும் ஸ்ரீதேசிகன் திருமலையப்பனுடைய கருணையே திருவேங்கட மலையாக ஆயிற்று என்கிறார். பெருமானது கருணை வெள்ளமானது கரும்புச் சாறு பெருகி ஓடும் ஓர் ஆறு போன்றது. அந்தக் கரும்புச் சாறு திடப்பொருளாகி வேங்கடமலை வடிவமான சர்க்கரையாக ஆயிற்று என்கிறார். ஆகப் பெருமானுடைய கருணையே திருமலையாக ஆனது. (ப்ரபத்யே தம் கிரிம் ப்ராய: ஸ்ரீநிவாஸா நுகம்பயா । இக்ஷுஸாரஸ்ரவந்த்யேவ யந்மூர்த்யா சர்க்கராயிதம் ॥- தயாசதகம்-1)

வேங்கடம் என்பதற்கே இரண்டு பொருள்கள் உண்டு. "தன் அடியார்களுடைய பாவங்களை ஒழிக்கும்" என்று ஒரு பொருள். "தன்னை அடைந்தவர்களுக்கு அழிவில்லாத ஐச்வர்யங்களைத் தரும்" என்பது மற்றொரு பொருள். இரண்டும் இங்கு மிகப் பொருத்தமானதே.

வேங்கடமலையின் பெருமை பற்றி ஆழ்வார்கள் பலபடியாகவும் போற்றிப் பேசுகின்றனர். பெண்களுக்கு நெற்றித் திலகம் தான் அழகைத் தருவது. அதுபோல, உலகத்துக்கு (பூமிப்பிராட்டிக்கு)த் திலகமாய் விளங்கி, அழகு சேர்க்கின்றது வேங்கடமலை என்கிறார் நம்மாழ்வார். (திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடம் - திருவாய்மொழி-6-10-1).

இந்தத் திருமலையை மாத்திரம் ஸேவித்தாலும் (பெருமானைக்கூட ஸேவிக்காமல்) நமது வினைகள் யாவும் அழிந்துவிடும் என்கிறார் ஆழ்வார் (திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே-திருவாய்மொழி 3-3-8). அது மட்டுமா! திருமலையே மோக்ஷத்தையும் கொடுக்கவல்லது என்று அருளிச்செய்கிறார் ஆழ்வார். (திருவேங்கடம் நங்கட்குச் சமன் கொள் வீடுதரும் தடங்குன்றமே - திருவாய்மொழி 3-3-7).

இப்படி நம்மாழ்வார் திருமலையின் பெருமையை அருளிச் செய்தது போலவே, திருமழிசையாழ்வாரும் கூறியருளுகிறார். நித்ய ஸூரிகளும் திருமலையைத் தொழுகின்றனர்; நம்முடைய பாபங்களையும், சரீரத்தில் உள்ள நோய்களையும், திருமலையே அழித்துவிடுகின்றது என்கிறார். (வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால் வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும் - நான்முகன் திருவந்தாதி -48).

வேங்கடமலையின் பெருமையை ஸ்வாமி வேதாந்த தேசிகனும் மிக அழகாகப் பேசுகின்றார். திருவேங்கடவன் உலகத்தில் உள்ளவர்களுக்கும் நித்யஸூரிகளுக்கும் கண் போன்றவன் என்கிறார் நம்மாழ்வார். (கண் ஆவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு - திருவாய்மொழி - 1-8-3) இப்படிக் கண்போன்றவனுடைய திருவடிகளை நமக்குக் காட்டித் தருகின்றது திருமலை. பாவிகளுடைய புண்ணியம், பாபம் என்ற இரண்டு வினைகளையும் ஒழிக்கின்றது திருமலை.

தேசிகன் பின்னும் பேசுகின்றார்: இதுவே பரமபதம் என்று சொல்லலாம்படி ப்ரகாசிக்கின்றது இம்மலை. பல புண்ணிய தீர்த்தங்கள் பெருகுகின்ற மலை புண்ணியத்தின் இருப்பிடமே இதுதான் என்று புகழப்படும் திருமலை. பரம பதத்தில் அடையும் அனுபவங்களை எல்லாம் இங்கேயே அடைவிக்கின்ற மலை.

வானவர்கள் - நித்யஸூரிகள் - திருமலையை விரும்பிவந்து ஸேவிக்கின்றனர் என்று ஆழ்வார்கள் பல இடங்களிலும் அருளிச் செய்கின்றனர். (மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் - திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான்-3; விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கடவேதியனை - திருமங்கையாழ்வார் - பெரியதிருமொழி 1-9-10; வானவர் வானவர்கோனொடும் சிந்துபூமகிழும் திருவேங்கடத்து - நம்மாழ்வார்- திருவாய்மொழி -3-3-2; வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் - திருமழிசையாழ்வார் - நான்முகன் திருவந்தாதி-48).

இவற்றை அடியொற்றியே ஸ்ரீதேசிகனும் விண்ணோர்களும் மண்ணோர்களும் விரும்பும் மலை திருமலை என்கிறார். இப்படி வேதமலையான வேங்கடத்தின் பெருமையை விவரித்து தேசிகன் அருளிச் செய்த பாடல்-

"கண்ணன் அடியிணை எமககுக்
காட்டும் வெற்பு
கடுவினையர் இருவினையும்
கடியும் வெற்பு
திண்ணம் இது வீடென்னத்
திகழும் வெற்பு
தெளிந்த பெரும் தீர்த்தங்கள்
செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகல் இதெனப்
புகழும் வெற்பு
பொன்னுலகில் போகமெலாம்
புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும்
விரும்பும் வெற்பு
வேங்கட வெற்பென விளங்கும்
வேத வெற்பே"
(தேசிகப்ரபந்தம்-
அதிகார சங்கிரகம்-43)

திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் வேங்கடவனைப் பற்றித் திருவேங்கடமாலையும் திருவேங்கடத்தந்தாதியும் இயற்றி உள்ளார். இவற்றில், நூறு பாடல்கள் கொண்ட திருவேங்கடமாலையில், ஒவ்வொரு பாடலிலும் முன்பாதியில் வேங்கடமலையின் பெருமையையும், பின்பாதியில் வேங்கடவன் பெருமையையும் பாடியுள்ளார். இதிலிருந்தே, வேங்கட மலையும் வேங்கடவனும் சமமான பெருமை உடையவர்கள் என்பது விளங்கும். அது மட்டுமா! முதலில் வேங்கடமலையின் பெருமையைப் பாடி

## சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

ஆர். இலட்சுமி - மேட்டுப்பாளையம்.

திருமகள் தன்னுடன் த்வ்யமாய் நின்றிருக்கும் திருமாலவன்
திரு அவதாரமே நின் திருவடி தொழுதிடுவார்தமை
திண்ணமாய் நின் கழுலருள் காத்தருள வேணும்
திருவேங்கடவன் அம்சமாய் புரட்டாசி சிரவணத்தில்
திரு அவதாரம் செய்திட்ட தூப்புல் தேவனே
காக்க வேணும் எமையே!

ஆச்சார்யனே அமரரும் ஆய்ந்துணர்ந்து
ஆராதனை செய்கின்றூர் அன்பினால் உம்மடியே
ஆனந்தமருளும் அளவிலா இன்பம் வந்தெய்தும்
ஆராஅமுதே அடிபணிவோம் நின் தாளினுக்கே
ஆகாரமாய் உயிர்குலமதற்கு ஆதவன் பொன்னருள் ஒளிர்வதுபோல்
ஆட்டுவித்திடும் மாயவன் இன்னருளால் தூப்புல்
தேவனே காக்க வேணும் எமையே!

செந்தாமரை மலரில் சிருங்காரமாய் கொலுவிருக்கும்
செங்கமலடி தரித்து சிறப்புடனே அடியவர்தமை
செழுங்கரத்தால் காத்தருளும் திருமாலவனுடன்
செல்வத்திருமகள் அலர்மேல்வல்லியும் அருளைத்தந்திட
செம்மை ஞானமுடைய தூப்புல் தேவனே காக்க வேணும் எமையே!

மாயவன் மதுசூதனன் மலரடி என்றும்
மாபெரும் துணையாய் மன்னுயிர்க்கு
மா மலர் மேவும் மலர்மகள் நாதன் தன்
மாயங்கள் காட்டி மானிடரைக் காக்கவே
மாதவன் தன் மறு அவதாரமே தூப்புல் தேவனே
காக்க வேணும் எமையே!

கண்ணன் இணையடி கழல்வினை தீர்த்திடும்
கள்ளழகன் கமலபாதம் காப்பு கண்களுக்கே
கருணை வடிவாம் கார்மேக வண்ணன் திருவடி
கண்டபோதே பறந்தோடும் துன்பம் தானே
கடல் வண்ணன் காத்தருளவே தூப்புல் தேவனே
காக்க வேணும் எமையே!

ஏழுமாமலையோன் எழுந்தருளும் ஏழுமாமலை
ஏழு பிறவிக்கும் துணை வரும் ஆதவன் இன்னருளே
ஏழைப்பங்காளன் எங்கள் அச்சுதன் என்றும் அருளிடுவான்
ஏதும் பயமில்லை என்றும் அவனே துணை
ஏற்றும் அடியவர்க்கும் அவனருள் வழித்துணையாகிடவே
தூப்புல் தேவனே காக்க வேணும் எமையே!

மங்களங்கள் பலவும் மன்னுயிர்க்கு அருளும்
மணிவண்ணன் மாதவன் மலர்மங்கை உறைமார்பினன்
மண்டியிடு வணங்கும் அன்பர்க்கு நேசனான
மதுரை மன்னவன் முகுந்தன் தாளினை மறவோம் நாமே
மறைகள் மாவும் போற்றும் மாலவன்அருள்
என்றும் நிலவிட தூப்புல் தேவனேகாக்கவேணும் எமையே!



அதற்குப் பிறகு தான் வேங்கடவன் பெருமையைப் பாடுகிறூர். அதனால், திருமலையின் பெருமையே சிறந்தது என்றும் கொள்ளலாம்.

இந்தப் பாடல்கள் நூறுமே மிக அழகான ஒரு தீஞ்சுவைக் காவியம். சிலேடை, யமகம், திரிபு முதலிய தமிழ் அலங்காரங்கள் நிறைந்தவை. இவற்றில் திருமலையைப் போற்றிப் பாடுவதை ஆழ்ந்து படித்து இன்புற வேண்டும். இவற்றில் ஐயங்கார் அழகுறக் கூறி இருக்கும் சில கருத்துக்களாவன - உலகத்துக்கு (பூமிப்பிராட்டிக்கு)ச் சிரத்தில் மணிமுடியாக - ரத்தின கிரீடமாகப் பொலிகின்றது திருமலை. இந்த வேங்கடமலை மக்கள் பிறவிக்கடலைக் கடப்பதற்கு ஒரு மரக்கலமாக உள்ளது.

மோக்ஷம் பெற்று வைகுண்டத்தை அடைந்த முக்தர்கள் கூட மீண்டும் வந்து திருமலையைச் சேவிக்க விரும்புகின்றனர். வேங்கடத்தின் முக்தி அளிக்கும் திறனைக் கண்டு வியந்து, பொன்மலையும் வெள்ளி மலையும் அதனை வணங்குகின்றன. (பொன் மலை- மேருமலை; வெள்ளி மலை-கைலாய மலை). பைத்தியம், மலட்டுத் தன்மை, வாய் பேசாமை, கைகால் முடம், கண் குருடு, செவிட்டுத் தன்மை மற்றும் உள்ள வியாதிகள் பிறவித் துயர், பாவங்கள் எல்லாவற்றையும் போக்கி அருளும் வேங்கடமலை.

இப்படி ஆழ்வார்களும் ஆசாரியர்களும் வேங்கடவனையும் வேங்கடமலையையும் போற்றிப் பாடியதில் சில அமுதத் துளிகளைப் பார்த்துச் சுவைத்து இன்புற்றோம். அந்த வேங்கடவனும் வேங்கடமலையும் எல்லோரையும் காத்திடுக. ●

(தொடர் கட்டுரை)

# திருமலை வரலாறு

ஆங்கில மூலம் : திரு. சாது சுப்பிரமணிய சாஸ்திரி

தமிழாக்கம் : திரு. அ. நடராஜன்

[புராணங்களிலும் இதிகாசங்களிலும் இலக்கியங்களிலும் பெரிதும் புகழ்ந்து போற்றப்படுவது, வரலாற்றுக்கெட்டாத தொன்மைக் காலத்திலிருந்து தலைசிறந்ததொரு திருத்தலமாகத் திகழ்ந்து வருவது திருவேங்கடம் அல்லது திருமலை. கலியுகத்தின் கண்கண்ட தெய்வமாக நின்ற திருக்கோலத்தில் நாள்தோறும் வரும் பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு அவர்கள் வேண்டுவன அனைத்தையும் வழங்கி அருள்பாலித்து வரும் திருவேங்கடவன் பற்றிய் செய்திகளும் அவன் குடிகொண்டிருக்கும் திருக்கோயில் பற்றிய விவரங்களும் வியப்பளிப்பனவாகும்.

திருமலைக்கோயிலிலும் திருப்பதியிலுள்ள கோவிந்தராஜர், இராமர், கபிலேஸ்வரர் கோயில்களிலும், திருச்சானூர் பத்மாவதி கோயில், யோகிமல்லவரம் பராசரேசுவரர் கோயில் ஆகியவற்றிலும் காணப்படும் ஏராளமான கல்வெட்டுகள் அரச பரம்பரையினரும் சாமானிய மக்களும் இக்கோயில்களுக்கென ஏற்படுத்தியுள்ள ஏராளமான நிவந்தங்கள் பற்றிக் கூறுகின்றன.

திருமலைக்கோயிலின் நிருவாகம் அன்றிலிருந்து இன்றுவரை பற்பல மாற்றங்களைக் கண்டிருக்கின்றது. அவை பற்றிய குறிப்புகளும் நம்மை வியப்பில் ஆழ்த்துவனவாகும். திருமலை- திருப்பதிக்கோயில்களைப் பற்றித் தெரிந்து கொள்வது என்பது பக்தி இயக்கத்தின் வரலாற்றினையும் சமயம் வளர்ந்த இனிய கதையினையும் ஓரளவு புரிந்து கொள்ள உதவுவதாகும்.

எனவே, இக்கோயில்கள் பற்றிய பன்முக ஆராய்ச்சி அறிஞர் பெருமக்களைக் கவர்ந்ததில் வியப்பு ஏதுமில்லை. சரித்திரம் மற்றும் தொல்பொருளியல் பேராசிரியர் முனைவர் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், திருமலைக் கோயிலின் பிரதான ஆச்சாரிய புருஷ குடும்பத்தைச் சேர்ந்தவரான திரு. டி.கே.டி. வீரராகவாச்சாரியர், வரலாற்றுப் பேராசிரியர் முனைவர் எம். ராமராவ், அரசுத்துறை நிருவாக அதிகாரி திரு. பி. சீதாபதி, அரசுத்துறை நிருவாக அதிகாரியும் ஆராய்ச்சி வல்லுநருமான முனைவர் என். ரமேசம் ஆகியோர் இக்கோயில்கள் பற்றிய வரலாற்று நூல்களை ஆங்கிலத்தில் எழுதியுள்ளனர்.

ஆயினும் திரு. சாதுசுப்பிரமணிய சாஸ்திரி ஆங்கிலத்தில் எழுதிய "திருமலை வரலாறு" என்னும் இந்நூலுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. ஏனெனில், இந்நூலாசிரியர் இன்றைய நிருவாக அமைப்பிலும் இதற்கு முன்பிருந்த நிருவாக அமைப்பிலும் பணிபுரிந்தவர் என்பதோடுகூட, திருமலை திருப்பதி கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களைப் படியெடுத்துப் பதிப்பித்தவரும் தி.தி. தேவஸ்தானக் கல்வெட்டியல் அறிக்கையை அறிஞர்களும் புகழ்ந்து போற்றும் வகையில் தயாரித்தவரும் ஆவார்.

தமிழ் 'ஸப்தகிரி' வாசகர்கள் பலர் இக்கோயில்கள் பற்றிய பல சிறப்பு விவரங்களை அறிந்திருக்க மாட்டார்கள். அவர்களும் இச்செய்திகளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆர்வமே இத்தமிழாக்கத்தின் நோக்கமாகும்.]

# அத்தியாயம் 1

## அறிமுகம்

இந்தியாவின் மிகப் பெரும் புகழ்வாய்ந்த புனிதப் பயணத்திருத்தலங்களுள் ஒன்றாகிய திருப்பதி இன்றைய ஆந்திர மாநிலத்தி[illegible]த்தாமுத் தெற்குக்கோடியில் சித்தூர் மாவட்டத்தில் வடஅட்சரேகை 13° 41' மற்றும் கிழக்குத் தீர்க்கரேகை 79° 24' இல் அமைந்திருப்பதாகும். அதற்கு வட திசையில் ஒரு மைலுக்குள்ளாகவே அதை ஒட்டியுள்ளதும், கிழக்கு மேற்காக இருப்பதும், கடப்பை மாவட்டத்தில பாம்பு போல் தோன்றும் மலையான சேஷாசலம் மற்றும் கர்நூல் மாவட்டத்தில் நல்லமலை (கருமலை) ஆகிய தொடர்களுடன் தொடர்ச்சியாக வடக்கில் செல்லும் மலைத்தொடரின் ஒரு பகுதியாக உள்ளதுமான குன்றின் மீது கோயில் கொண்டிருக்கும் திருவேங்கடப்பெருமானின் காரணமாக உருவாகியது திருப்பதி. இம்மூன்று மலைத்தொடர்களும் கிழக்கு மலைத்தொடர்களின் வடபாதியாக அமைந்துள்ளன. இம்மூன்று மாவட்டங்களினூடே [illegible] உள்ள மலைத்[illegible]டர்களுடனும் மலைமுகடுகளுடனும் [illegible] களுடனும செல்லும் இம்மலைதொடர்களின் மேற்பகுதி அமைதியாகச் [illegible] படுத்திருக்கும் [illegible] பெரும் பாம்பு வடிவில் [illegible]கிறது. இது [illegible] ரம் தலைகளின் மீது (படங்களின் மீது) உலகைத் தாங்குவதாகவும், திருப்பதி மலையின் மீதுள்ள திருவேங்கடவனைத் தனது ஏழு தலைகளின் மீது சுமப்பதாகவும் புராண நோக்கில் கருதப்படும் ஆதிப்பாம்பாகிய ஆதிசேஷனைக் குறிப்பதாகச் சொல்லப்படுகிறது. அதன் சுருண்ட உடலின் மீதுள்ள நரசிம்மர் உறையும் அகோபிலம், அதன் முறுகிய வாலில் அமைந்துள்ள புனித கிருஷ்ணை நதியின் தென்கரை மீதிருக்கும் மல்லிகார்ஜுனர் கோயில் கொண்டுள்ள ஸ்ரீசைலம் ஆகியவை இரண்டும் திருப்பதிக்கு வடக்கே முறையே கிட்டத்தட்ட 120 மைல் தொலைவிலும் 180 மைல் தொலைவிலும் உள்ளன; பாம்பின் வாய்ப்பகுதியில் உள்ள திருக்காளத்தியப்பர் வதியும் திருக்காளஹஸ்தி திருப்பதிக்குத் தென்கிழக்கில் சுமார் 25 மைலுக்குள்ளாகவே அமைந்திருக்கின்றது.



திருப்பதி மலை கடல்மட்டத்திற்கு மேல் 2820 அடி உயரத்திலும் ஏறத்தாழ 100 சதுர மைல் பரப்புடையதாகவும் உள்ளது. அதன் ஏழு உச்சிகளும் ஆதிசேஷனின் ஏழுதலைகளைக் குறிப்பன ஆகும்; முதல் மூன்று அல்லது நான்கு பகுதிகளும் சமதளமாகவும் தொடர்ச்சியாகவும் உள்ளன; ஐந்தாவது மற்றும் ஆறுவது பகுதிகளிடையே ஆழமான பள்ளத்தாக்கு ஒன்று உள்ளது; இது 'அவஸாரி' அல்லது 'அவ்வாச்சாரி' பள்ளத்தாக்கு என்றழைக்கப்படுகின்றது. இம் மலை முகடுகள் சேஷாசலம், வேதாசலம், கருடாசலம், அஞ்சனாசலம், விருஷாபசலம், நாராயணாசலம் மற்றும் வேங்கடாசலம் எனப் பெயரிடப்பட்டுள்ளன. அவற்றுள் திருவேங்கடவன் வேங்கடாசலம், என்னும் ஏழாவது மலையில் கடல் மட்டத்திற்குமேல் ஏறத்தாழ 3600 அடிகள் வரை உயர்ந்திருக்கும் நாராயணகிரி என்னும் மிக உயரமான உச்சிக்குக் கிழக்காக இரண்டு மைல் தொலைவுக்குள்ளாக சுவாமி புஷ்கரணி - திருக்குளத்தின் தென்கரையிலுள்ள கோயிலில் குடிகொண்டுள்ளார்.

வேங்கடமலையின் மீது உறைவதனால் அக்கடவுள் வேங்கடேசுவரர், அதாவது,

வேங்கட மலைக்கு அதிபன் என அழைக்கப்படுகின்றார்; வேறு குறிப்பான பெயர் எதுவும் அவருக்குக் கிடையாது.

திருப்பதி, அதாவது, இலட்சுமியின் நாயகனுடைய ஊர் என்னும் பெயர் உண்மையில் திருவேங்கடவன் கோயில் அமைந்துள்ள வேங்கடமலை மீதுள்ள கிராமத்திற்கே பொருத்தமானதாக இருக்கும்; ஆனால் மலையின் அடிவாரத்தில் உள்ள நகராட்சி ஊருக்கே அப்பெயர் தரப்பட்டுள்ளது. கீழத்திருப்பதி என்றும் அது அழைக்கப்படுகிறது. அதனின்றும் வேறுனதான மேல்திருப்பதி என்று சொல்லப்படும் திருமலை (புனிதமலை) என்னும் பெயர் மலை மீது அவரது கோயிலைச் சுற்றியுள்ள கிராமத்திற்கு வழங்கப்பட்டுள்ளது.

திருமலை அல்லது மேல்திருப்பதியில் திருவேங்கடவனின் புனிதக்கோயில் மட்டுமே உள்ளது; திருப்பதியில் கோவிந்தராஜர் மற்றும் கோதண்டராமர் கோயில்களும் ஊரின் வடபகுதியில் மலையடிவாரத்தில் கபிலேசுவரர் கோயிலும் இருக்கின்றன. திருச்சானூரில் அலர்மேல் மங்கை அல்லது ஸ்ரீபத்மாவதி தேவி என்று அழைக்கப்படும் திருவேங்கடவனின் தெய்வீகத் துணைவியான ஸ்ரீமகாலட்சுமி தேவியின் கோயிலும் அதன் வளாகத்திலேயே ஸ்ரீகிருஷ்ணர், பலராமர், ஸ்ரீசுந்தரராஜர் ஆகியோரின் கோயில்களும் உள்ளன; அதோடுகூட, பண்டைக்காலத்தில் திருச்சானூரின் ஒரு பகுதியாக) விளங்கிய யோகிமல்லாவரம் என்னும் பக்கத்துக் கிராமத்தில் ஸ்ரீபராசுவரேசுவரர் கோயிலும் அமைந்துள்ளது. திருச்சானூர் என்னும் பெயர், தொடக்ககாலக்கல்வெட்டுக்களில் காணப்படும் திருச்சோகினூர் (அதாவது யோகியின் ஊர்) என்பதன் மருஊப் பெயராயிருக்க வேண்டும்; இதில் குறிப்பிடப்படும் யோகி பராசர யோகியாகவும் அவர் அமைத்து வழிபட்டதனால் யோகி மல்லாவரத்திலுள்ள இறைவன் பராசுவரேசுவரர் எனப்பெயர் பெற்றும் இருக்கக்கூடும். ஆனால், பிற்காலத்தில் திருச்சோகினூர் என்னும் பெயர், திருச்சானூர்க் கோயிலிலுள்ள கிருஷ்ணரை வழிபட்டதாகக் கருதப்படும் சுகயோகி என்பவரோடு இணைக்கப்பெற்று, திருச்சுகனூர், சுகனூர், சுகபுரி, சுகக்கிராமம் என மாற்றமடைந்தது.

திருவேங்கடவன் தனது தெய்வீக ஆனந்த நிலைய விமானத்தில் எழுந்தருளியிருக்கும் வேங்கடாசலம் அல்லது வேங்கடாத்ரி மற்றும் வைணவ ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் வேங்கடம் என்றழைக்கப் பெற்ற திருப்பதி மலை இந்திய சமயத்தின் மரபு இலக்கியத்தில் ஒரு தனிப்பட்ட புனிதத்தன்மையினை அடைந்திருப்பதோடுகூட, தென்னிந்தியாவின் மிகப்புனிதமான யாத்திரைத் தலங்களுள் ஒன்றாகவும் கருதப்படுகின்றது. திருமகளோடு மகாவிஷ்ணு விளையாடும், அவருடைய வழக்கமான தெய்வீக உறைவிடமான ஸ்ரீவைகுண்டத்திலுள்ள கிரீடாத்ரி அல்லது விளையாட்டு மலையே அது எனவும் கருதப்படுகின்றது; ஸ்ரீமகாவிஷ்ணுவின் வெண்மைவராக அவதாரமான ஸ்ரீசுவேத வராகரின் ஆணையின் பேரில் இவ்விளையாட்டு மலை இறக்கைகளுடன் கூடிய அவரது வாகனமான கருடனால் பூமிக்குக் கொண்டுவரப்பட்டதாகச் சொல்லப்படுகின்றது.

(தொடரும்)

## மார்கழி - தையில் ஆழ்வார் -ஆசாரியர்கள் அவதார நன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| *1. | தொண்டரடிப்பொடியாழ்வார் | கேட்டை | 14-01-99 |
| 2. | பெரிய நம்பிகள் | கேட்டை | 14-01-99 |
| 3. | நாலூராச்சான்பிள்ளை | கேட்டை | 14-01-99 |
| 4. | எம்பார் | புனர்வசு | 30-01-99 |
| *5. | திருமழிசை ஆழ்வார் | மகம் | 2-02-99 |
| *6. | கூரத்தாழ்வார் | அஸ்தம் | 5-02-99 |

* தி.தி. தேவஸ்தானத்தில் கொண்டாடும் நட்சத்திரங்கள்

### வாசகர்களுக்கு

இவ் இதழ் பிரம்மோத்ஸவ சிறப்பிதழாக வெளிவருவதால் 'தொடர் கட்டுரைகள்' வெளியிடப்படவில்லை. தொடர்ந்து அடுத்த இதழிலிருந்து வெளிவரும்.

—ஆசிரியர்.

# பிறப்பறுக்கும் பிரான்

டாக்டர். கே.கே.ஏ. ரங்கராஜன் - திருப்பதி.

*"பேசு மின்திரு நாம மெட்டெழுத்*
*துஞ்சொல்லி நின்று பின்னரும்*
*பேசு வார்தம் மையுய்ய வாங்கிப்பி*
*றப்பறுக்கும்பி ரானிடம்*
*வாச மாமலர் நாறு வார்பொழில்*
*சூழ்த ரும்உல குக்கெல்லாம்*
*தேச மாய்த்திக ழும்ம லைத்திரு*
*வேங்க டமடை நெஞ்சமே"*
-(பெரியதிருமொழி 1-8-9)

இதன் பொருளாவது: எல்லோராலும் உச்சரிக்கப்படுமதாய், நாவுக்கினிய திருநாமமான எட்டுத் திருவக்ஷரத்தையும் ஒரு தரம் அநுஸந்தித்து பின்னையும் அநுஸந்திக்குமவர்களை உய்விக்கும்படி அங்கீகரித்து அவர்களுடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்கித் தந்தருளுகிற, மிகவும் உபகாரம் செய்கிற இடமாய்ப் பரிமளத்தையுடையதாய்ச் சிறந்ததான பூக்கள் கமழ்கின்ற பரந்த சோலைகளாலே சூழப்பட்டிருப்பதாய் எல்லா உலகுக்கும் ஒளியை விளைக்கத் தக்கதாய் விளங்குகின்ற மலையான திருவேங்கடத்தை அடைவாய் என்று தம் நெஞ்சிற்கு திருமங்கையாழ்வார் உபதேசம் செய்வதாகும்.

## ஆழ்வார் திருவெட்டெழுத்தும் கற்ற பெருமை

வேத ஸாரமான திருமந்த்ரம் எனப்படும் திருவெட்டெழுத்தை 'வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர் கோன்' என்னும்படி திருமணங் கொல்லையில் பூவார் திருமகள் நாச்சியார் திருமுன்பே திருமங்கையாழ்வார் பெற்றார். 'இச் சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது' (முமுக்ஷுப்படி 47)' என்னும் பிள்ளை உலகாரியன் திருவாக்கிற்கிணங்க திவ்ய தம்பதிகளின் சேர்த்தியிற்காட்டிலும் பெருமை வேறு என்னவேண்டும்?'

ஓம் நமோ நாராயணாய என்னும் திருவெட்டெழுத்தை 'மந்த்ர ராஜம்' என்றும் அழைப்பர். இந்தச் சீரிய மந்த்ரத்தை பதரீகாச்ரமம் என்னும் திவ்ய தேசத்தில் எம்பெருமான் தானே சிஷ்யனான நரனுமாய், தானே ஆசார்யனுமாய் நாட்டாரறியும்படி உபதேசித்தருளினான். திருமங்கையாழ்வார் பெற்ற பாக்யம் நரனுக்குக் கிட்ட வில்லை.

## திருமந்த்ரத்தின் சீர்மை

*"மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்-*
*குள்ளீடான*
*வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான*
*ஆசார்யன்*
*பக்கலிலும் ப்ரேமம் கநக்க*
*உண்டானால்*
*கார்யகரமாவது"*

என்பது பிள்ளை உலகாரியரின் திருவாக்கு (முமுக்ஷு 4). அதாவது அறிய வேண்டியவற்றை அறிவிக்கின்ற இம்மந்த்ரந்தன்னிலும் தலைவனாயிருக்குந்தன்மை (சேஷித்வம்), தஞ்சமாய் அடையப்படும் தன்மை, (சரண்யத்வம்), அநுபவிப்பதற்குப் பயனாக இருக்கும் தன்மை (ப்ராப்யத்வம்) ஆகிய



இம்மூன்று நிலைகளோடு எம் பெருமான் கூடி இருப் பதை இம்மந்த்ரம் விவரிக்கி றது. 'தந்மந்த்ரம் ப்ராஹ்மண தீநம்' (அந்த மந்த்ரம் ஆசார் யனின் அதீநமாயிருப்பது) என் கிறபடியே இதனுடைய தகுதிக் கேற்ப நினைவுடையவனாய்க் கொண்டு தனக்கு உபகரித்த ஆசார்யன் திறத்திலும் அந்தந் தத் தகுதிகளுக்கேற்ப விருப்பம் மிக உண்டானால் இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யத்தை தலைக் கட்டிக் கொடுக்கும் என்பதாம்.

குடிசெய்வ னென்னும் ஒருவற்குத்
தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.
(திருக்குறள்)

என்பது பொய்யாமொழி யல் லவா!

இம்மந்த்ரத்தின் சீர்மையைத் திருமங்கையாழ்வார் பாசுரங் கள் மூலம் நாம் இங்கு அநு பவிப்போம்.

## தலைவனாயிருக்கும் தன்மை (சேஷித்வம்)

"இது (ப்ரணவம்) 'அ' என்றும் 'உ' என்றும் 'ம' என்றும் மூன்று திருவ க்ஷரம்"

(முமுக்ஷுப்படி 32)

'ஓம்' என்னும் ப்ரணவம் பிரிந்த நிலையில் மூன்று எழுத் துக்களையும், மூன்று பதமா யும், மூன்று அர்த்தங்கள் காட் டுமதாயும், கூட்டான நிலையில் (ஸமஷ்டி) ஓரெழுத்தாயும் ஒரு பதமாயும் ஓரர்த்தத்தைக் காட் டுவதாயிருக்கும். ஆகவே, எம் பெருமான் அகாரவாச்யன் என் பது பெறப்படுகிறது. திருவள் ளுவரும்,

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.
(திருக்குறள்-1)

என்கிறார்.

ஈச்வரன் எல்லோ ருக்கும் தலைவனாதலால் அவ னுக்குச் சேஷித்வம் உண்டு என் பது தெரிகிறது. திருவேங்கட வனுக்கே தலைவனாந் தன்மை (சேஷித்வம்) உரித்தாகும் என்ப தைக் கீழ்வரும் திருமங்கையாழ் வாரின் பாசுரங்களால் அறிய லாம்.



1. 'பிள்ளையாயுயிருண்ட வெந்தை
பிரான்' (1.8.2)

(எனக்கு நாதனாய் உபகார னான ஸர்வேச்வரனானவன்)

2. '..........இணைத்தாமரையடி-
யெம்பிரான்
சென்றுகுன்ற மெடுத்தவன் (1.8.3)

(உபகாரகனாய்.......... போய்க் கோவர்த்தன மலையைக் குடை யாக தரித்த ஸர்வேச்வரன்.)

3. இடவெந்தை மேவிய
வெம்பிரான் (1.8.4)

(திருவிடந்தையில் பொருந்தியி ருக்கிற ஸ்வாமி.)

4. '.........திருமாலிருஞ்சோலை மேவிய
வெம்பெருமான்' (1.8.5)

(தெற்குத் திருமலையான திரு மாலிருஞ்சோலையிலே நித்யவா ஸம் பண்ணுகிற ஸர்வஸ்வா மியாய்)

5. '............பேராயிரம் பேசநின்ற
பிறப்பிலி' (1-8-7)

(ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி ஆச்ரயிருக்கும்படி நித் யவாஸம் பண்ணுமவனாய் ஜந் மரஹிதனான ஸர்வேச்வரன்)

6. '..........சலமாகி நின்ற வமரர்கோன்'
(1-8-8)

(நித்ய ஸூரிகளுக்குத் தலை வன்)

இப்படிப்பட்ட சிறந்த தலை வனான (சேஷியான) திருவேங் கடத்தான் உறைந்துள்ள திரு மலையை அடையும்படித் தம் மனத்தை விளித்துக் கூறுகிறார் ஆழ்வார்.

## தஞ்சமாக அடையப்படும் தன்மை (சரண்யத்வம்)

திருமந்த்ரத்தின் நடுப்பதமான நம: என்கிற பதம் ந என்றும் ம: என்றும் இரண்டு பதமாக உள்ளது. அதாவது ம: என்ற

ஆரும் வேற்றுமையுருபை ஈற்றி லேயுடைய இந்த மகாரத்தால் மகாரத்தின் பொருளான ஆத் மாவுக்குக் கீழ்சொன்ன நான் காம் வேற்றுமையால் 'பகவத் விஷயத்தின் பொருட்டு' என் பதற்கு எதிர்த்தட்டான 'தன் பொருட்டு' என்று தோற்றுகை யாலே 'தனக்குரியன்' என்று மத்தைச் சொல்லுகிறது. 'ந' என்றும் எதிர்மறைப்பொருளான நகாரத்தாலே அதைக் கழிக் கிறது என்பதாம். எனவே ம: ந என்கிற இப்பதத்தால் ஜீவாத்மா 'தனக்குரியனன்று' என்பதனால் தனக்குரியனாக அல்லாது ஈச்வரனுக்கே (சரண் யன்) உரியன் என்பது தெளி வாகிறது. அந்த ஈச்வரனே காத் தற் தொழிலைச் (சரண்யனாக, ரக்ஷகனாக நின்று) செய்கிறன் இதனை ஆழ்வாரும்,

1. 'நாயேன் வந்தடைந்தேன்
நல்கியா ளென்னைக்
கொண்டருளே' (1.9.1)

2. 'குளிர்மாமலை வேங்கடவா....
அடியேனை
ஆட்கொண்டருளே' (1.9.3)

3. 'அலந்தேன் வந்தடைந்தேன்
அடியேனை
ஆட்கொண்டருளே' (1.9.4)

4. 'எப்பாவம் பலவும்......
நின்னடியே தொடர்ந்தேத்தவும் (1.9.5)

என்று இவ்வாறாக இப்பதிகம் முழுவதும் நான் எனக்கு உரி யேன் இல்லையாதலால் நின் னடியையே சரணுகப் பற்றுகி றேன் சரணுகத வத்ஸலனான திருவேங்கடவனைச் சரணம் புகுவதைக் காணலாம்.

'கொன்றேன் பல்லுயிரை' (1.9.3) என்னும பாசுரத்தில் எம்பெருமானின் (திருவேங்க டமுடையானின்) சரண்யத்வத் தைப் பற்றிப் பெரியவாச் சான்பிள்ளை ஸ்ரீராமாயண ச்லோகத்தை மேற்கோள்காட்டி மேலும் விரித்துரைக்கிறுர்.

ஆர்த்தோவா யதிவா த்ருப்த:
பரேஷாம் சரணுகத: ।
அரி: ப்ராணுந் பரித்யஜ்ய
ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥
(ஸ்ரீரா.யு.கா.18-28)

அதாவது நொந்தவனாயிருப் பவனாயினும், செருக்குற்றவனா யினும், இதரர்களுடைய உத வியை வேண்டி வந்தடைந்த வன் பகைவனாயினும் தர்மத் திற்கு விலக்கானதில் புகாது சித்தமுடையவனானால் உயி ரைக் கொடுத்தும் ரக்ஷிக்கப்ப டவேண்டியவன் என்று சக்ர வர்த்தி திருமகன் கூறுவதாகும்.

## அநுபவிப்பதற்குப் பயனாக இருக்கும் தன்மை (ப்ராப்யத்வம்)

'நாராயணனென்றது நாரங்களுக்கு அயநம் என்றபடி' (முமுக்ஷுப்படி 95)

அதாவது நாராயண என்னும் பதம் நாராணும் அயநம் ய: ஸ: நாராயண: (நாரங்களுக்கு இடமாக இருப்பவன் எவனோ அவனே நாராயணன்) என்று வேற்றுமைத் தொகை (தத்பு ருஷ ஸமாஸம்)யாகவும், நாரா: அயனம் யஸ்ய ஸ: நாராயண: (நாரங்களை இடமாக உடைய வன்) எவனோ அவனே நாராய ணன்) என்று அன்மொழித்தொ கையாகவும் (பஹுவ்ரீ ஸமா ஸம்) சொல்லப் படுகையாலே அதில் முதலில் வேற்றுமைத் தொகையில் அர்த்தத்தை 'நாரங் களுக்கு அயனம்' என்றபடி என் பதாம். இதனால் அந்த நாரா யணனே (ஈச்வரன்) ப்ராப்யம் (அடையப்படும் பொருள்) என் பது புலனாகின்றது. ஆகவே எம்பெருமானுக்கு ப்ராப்யத்வம் உண்டு என்பது தெளிவாகிறது.

இந்த ப்ராப்யத்வத்தை ஆழ் வார் 'கொங்கலர்ந்த மலர்க்கு ருந்த மொசித்த' (1.8) என்னும் பதிகத்தாலும், 'தாயே தந்தை யென்னும்' (1.9) என்னும் பதி கத்தாலும் 'திருவேங்கடமடை நெஞ்சமே' (1-8-1 முதல் 9 வரை) என்றும் 'நாயேன் வந்தடைந் தேன்' (1-9-1) என்றும் 'அடி யேனை ஆட்கொண்டருளே' (1-9-2 முதல் 9 வரை) என்றும் ப்ராப்யப் பொருளைக் காட்டி உலகிற்கு உபதேசிக்கிறுர் திரு மங்கையாழ்வார்.

'நின் திருவெட்டெழுத்துங் கற்று - நானுற்றது முன்னடி யார்க்கடிமை' (8-10-3) என்று கூறி பாகவததோத்தமர்களை ஆராதித்து அதன் பய னாக எம்பெருமானை உகப் பித்த பெருமை இவ்வாழ்வா

## அத்தர் தந்த அருட்பாற்கடலுண்டு

உபமன்னிய முனிவர் குழந்தைப் பருவத்திலே பால் வேண்டி அழுதபொழுது தந்தையாராகிய வியாக்கிரபாத முனிவர் நட ராஜரை வேண்ட, அவர் திருப்பாற்கடலையே அக் குழந் தைக்கு குடிப்பதற்கு கொடுத்தருளினார் என்பது வரலாறு ஆகும். இதனை சிவரகசியம், கோயிற்புராணம் ஆகிய நூற்க ளில் கூறப்பட்டுள்ளது. "பாலுக்கு பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்" என்று திருவிசைப்பா கூறுகிறது.

திருமதி. இரா. தெய்வ வீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

ருக்கே தகும். மேலும் விரோதியான இந்த ஸம்ஸாரத்தையறுத்துக் கொடுக்கும் உபகாரகன் வாழ்கின்ற இடம் திருவேங்கடம் என்று வெளிப்படையாகத் தெரிவிக்கிறார் ஆழ்வார். நம்மாழ்வாரும் 'ஆக்கைப் புகாமை உய்யக் கொள்வான் நின்ற வேங்கடம் நீள் நிலத்துள்ளது' என்கிறார். அதாவது ஆழ்வாரை அநுக்ரஹிப்பதற்காக, ஸர்வரக்ஷணார்த்தமாக ஸமயத்தை எதிர்பார்ப்பவனாய்க் கொண்டு நிற்கிற திருமலை இந்தப் பூமியிலுள்ளது என்பதாம். 'பரமபதத்துக்குண்டான ஏற்றம்போலே திருமலையிங்கேயாகையாலே ஸம்ஸாரம் உத்தேச்ய மாம்படி' என்று திருமலையின் பெருமையைப் பெரியவாச்சான்பிள்ளை, விவரிக்கிறார். ஆயினும் 'பிறப்பறுக்கும் பிரான்' அதாவது விரோதியான ஸம்ஸாரப்பற்றை அற்று விழும்படிச் செய்து ரக்ஷிக்கவல்லவன் திருவேங்கடமுடையான் ஒருவனே என்று திருமங்கையாழ்வார் திட்டவட்டமாகக் கூறுகிறார். திருமங்கையாழ்வார்,

'பேசுமின் திருநாமமெட்டெழுத்தும்
........பிறப்பறுக்கும் பிரான்'

என்று எந்தத் திவ்ய தேசத்தைக் குறித்தும் பாடினாரில்லை.

எனவே இனிமையான திருவெட்டெழுத்துங்கற்று அவனுடைய் (எம்பெருமானுடைய) அடியார்களுக்கே உற்றவனாயிருந்து 'வேங்கடத்துறைவார்க்கு நம' என்று சொல்லித் திருவேங்கடவனை அநுபவிப்போமாக!

ஸ்ரீவேங்கடேஸோ விஜயதே!

திருமங்கையாழ்வார்
திருவடிகளே சரணம்.



## ஸ்ரீவேங்கடவன் துதி

திரு. வி. வேங்கடசாமி - விழுப்புரம்.





மஞ்சுலாவு சோலை சூழ் வேங்கடத்தின் மலர்வண்ணன்
தஞ்சமென நினைந்தோர்க்கு தானருளும் கோவிந்தன்
கொஞ்சுமெழில் கருணைக்கண் கொண்டவனாய் விளங்குபவன்
பஞ்சமின்றி தானருளும் பாங்கான வேங்கடவன்.

வேண்டுவன வேண்டியாங்கு விழைந்தருளும் மாதவனாய்
காண்பதற்கு களிப்பெய்தும் கருமேக வண்ணமவன்
திண்ணமென நினைந்தார்க்கு தீராத வினைதீர்க்கும்
கொண்டலென விளங்குகின்ற கொடைவள்ளல் தான்அவனே.

என்றும்மைக் காண்போமோ எனஏங்கும் அடியார்க்கு
நன்றெனவே தானருளி நலமளிக்கும் பத்மநாபன்
கன்றுக்குப் பாலூட்டும் தாயெனவே காத்தருளும்
கருணைமிகு வள்ளலவன் ஸ்ரீதரனாய் விளங்குபவன்,

கார்மேக வண்ணமவன் சங்கைக்கை கொண்டவனாய்
பார்போற்ற துயரறுத்து சங்கொலிக்கும் கேசவனாய்
மார்பதனில் திருமகளை மனங்களிக்க ஏற்றருளி
ஆர்ப்பரித்து ஆளுகின்ற அருட்கொடையன் வாமனவன்

பற்றறுக்க வழிகாட்டும் பண்பாளன் மதுசூதனை
உற்றாரும் மற்றோரும் உறுதியுடன் தாம்நினைந்து
ஏற்றமதை வாழ்வதனில் இன்பமுடன் பெற்றிடவே
போற்றுபவர் என்ஞான்றும் புகலடைவர் இதுதிண்ணம்.

நாராயணா என்றும்மை நாவதனால் தொழுதேத்தும்
பேராயிரம் பெற்றுயர்ந்த பெருமாளே வேங்கடவன்
ஆராஅன் பினடியார்க்கு அனுதினமும் மகிழ்ந்தருளும்
பேராளன் பெரும்புகழை பிரியமுடன் நாம் துதிப்போம்.

Edited and Published on behalf of T.T. Devasthanams by N.S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press
by M. Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D. Press, Tirupati - 517 507.



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |

### வாராந்திர சேவைகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |

### வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லககு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |

(உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

